பேராசிரியர்

திருமணம் செல்வக் கேசவராய முதலியார்

பயன்படுத்திய இந்நூல்

அவர்கள்தம் பேரன் திருவாளர்

தி நம்பிராசன் அவர்களால்

மறைமலையடிகள் நூல்நிலையத்திற்கு

அன்பளிப்பாக

வழங்கப்பெற்றது.

திருச்சிற்றம்பலம்.

# சைவசபை, பாளையங்கோட்டை

# சட்டங்கள்.

கானாடுகாத்தான்

மான். S. R. M. M. C. T. பெத்தாச்சி செட்டியாரவர்கள்

பொருளுதவியால் அச்சிடப்பட்டன.

1912.

# பொருள் அட்டவணை.

திருச்சிற்றம்பலம்

# முகவுரை.

இக்கழகம், பாளையங்கோட்டையில் 1886 ம் ஆண்டு உண்டாக்கப்பட்டு அவ்வூர் கண்டோன்மெண்டு வார்டு, கோபாலசுவாமி கோவில் தெற்கு வீதியில் சபையார் கட்டிய "திருநாவுக்கரசு நாயனார் திருமடம்" என்னும் கட்டிடத்தில் * ஜய வருடம் தை மாதம் 26 ம் தேதி (1895 ம் வருடம் பிப்பிரவரி ௴ 7 ம் தேதி) யில் நிலையிடப்பட்டது.

இக்கழகத்தின் அடிப்படைகள் உளத்தூய்மையிற் சிறந்த சீரியர்களாலமைக்கப்பட்டன. அவை திராவிடருள் இடைப்பெறல் வாலாய் கீழ்நிலையெய்தியவர்களை நடுநிலைப்படி பண்டைநிலைக்கு உயர்த்தி அத்தொகுதியார் ஐவரையும் அவரது உட்பகுதிகளையும் ஒன்றாகப்பிணித்து ஒழுக்கங்களைத் திருத்தி தமிழறத்தைத் தற்கால நிலைமைக்கேற்பத் திகழச்செய்து பல்வேறு சமயங்களையுந் தன்னகத்தடக்கி விரிந்துவிளங்கும் தனித் தமிழ்மதத் தத்துவமாகிய சைவ சமயத்தின் பரந்த ஆழ்ந்த உண்மைகளை அந்நன்மக்கள் உளத்திடை விளங்கும்படி செய்வன. இத்திருத்தங்கள் எவற்றிற்கும் தலைமையானது திராவிட மொழிகளின் தாய்மொழியாகிய தமிழ் மொழியைத் தன்னியல் நாம் விளங்குமாறு ஓம்புதல்.

இக்கால் நூற்றாண்டுக்கு மேலான காலத்தினுள், இக்கழகம் முன்னர்க் குறித்திட்ட நன்னோக்கங்கள் பலவற்றையும் பெரிது முயன்று உறுதிசூழ்ந்ததென்பதிற் சிறிதும் ஐயமின்று. ஆயினும், காலமும் அறிவும் வளர்ந்துவருவதற்கேற்ப கழகவளர்ச்சி சாலாமையின் முன்னோர் கருதியவாறு இவரும் ஊக்கிச்செல்லுதற்பொருட்டு முன்னோர் சொல்லும் பொருளும் ஒப்பப்பேணி இச்சட்டங்கள் திருத்தம்பெற்றன.

* 1895 ம் வருடம் பிப்பிராவரி ௴ 9 ம் தேதி 1070 ம் ௵ தை ௴ 28 ம் தேதி சனிக்கிழமை நிர்வாகசங்கத்தாரால் பிறப்பித்த புரோசீடிங்ஸ் பார்க்

இச்சட்டங்கள் தமிழிலும். ஆங்கிலத்திலும் அச்சிடப்பட்டிருக்கின்றன. இவைகளை ஆக்கியோர் இக்கழகவுறுப்பினர் ஸ்ரீமான் T. பொன்னம்பலம் பிள்ளையவர்கள், M. R. A. S, Retired Excise Commissioner (Travancore).

எங்கள் வேண்டுகோட்படி தங்கள் தொந்தரவைப் பொருட்படுத்தாமல் இச்சட்டங்களை ஆக்கிக்கொடுத்த இப்பெருந்தகையாளர்க்கும் அதனை ஆராய்ந்து சீர்த்திபெற முற்றித்தந்த உட்கழகத்தினர்க்கும் இக்கழகத்தினர் வந்தனம் உரிமையாகின்றது.

இங்ஙனம்,

சைவசபையார்.

---

# CERTIFICATE OF INCORPORATION.

**No. I of 1912-13.**

I hereby certify, pursuant to Act XXI of 1860 of the Governor-General of India in council entitled "An Act for the Registration of Literary, Scientific and other charitable societies, 1860" that "The Palamcottah Saiva Sabai" is incorporated as a society under the aforesaid Act.

STATION PALAMCOTTAH,
*Dated, 21st May, 1912.*

(SD.) A. THILLANAYAGAM PILLAI,
*Ag. Asst. Registrar of Joint Stock Companies.*

## MEMORANDUM OF ASSOCIATION.

1. The name of the Association is Saiva Sabah.

2. Its Head-Quarters is Thirunavukarasu Nayanar Thirumadam situated at the South Car Street, Gopalasamy Temple in the cantonment ward of the Palamcottah Municipal limits, Tinnevelly District, Madras Presidency.

3. The object of the Association is the promotion of religious, moral, social, literary and intellectual advancement of all Tamil People in general and of the members of the society in particular.

4. We, the undersigned, whose names, places of residence and occupations are given below, have formed ourselves into a society in pursuance of the memorandum of Association referred to above and beg that it may be registered with the provisions of the Registration of Societies, Act, viz., Act XXI of 1860

5. The names, the place of residence and occupation of the Office-bearers and other members .

(1) The Honourable S. T Shunmugam Pillai Avergal, *Dewan, Ettayapuram.........President.*

(2) M.R.Ry. S. Kumarasamy Reddiar Avergal, B A, B.L., *High Court Vakil, Palamcottah. Vice-President.*

(3) " V. S. Sivagnana Desikar, Avergal, *Palamcottah, Secretary.*

(4) " S. Viravahu Pillai Avergal, *Contractor, P.W.D. Palamcottah. Treasurer.*

(5) " T. Ponnambalam Pillai Avergal, M. R. A. S., *Retired Excise Commissioner, Travancore, Sivasailam.*

(6) " C. Satagopa Pillai, Avergal, *District Court Pleader, Tinnevelly.*

(7) " P. A. Venuvanalingam Pillai Avergal, *Retired Deputy Accountant, L. F. Engineer's Office, Palamcottah.*

திருச்சிற்றம்பலம்

# சைவ சபை.

## சட்டங்கள்.

### I-வது, தொகுதி.

1 "சைவசமயாபிவிர்த்தி" என்ற பெயர்கொண்ட இக்கழகம் இது முதல் "சைவசபை" யென்றழைக்கப்படும்.

2. இக்கழகம் பாளையங்கோட்டையில் 1886-ம் ஆண்டில் உண்டாக்கப்பட்டு அவ்வூர் கண்டோன்மெண்டுவார்டு, கோபாலசுவாமி கோவில், தெற்கு ரதவீதியில், சபையார் கட்டிய, "திருநாவுக்கரசு நாயனார் திருமடம்" என்னும் கட்டிடத்தில் ஜயவருடம் தை மாதம் 26-ம் தேதி (1895-ம் வருடம் பிப்பிரவரி மாதம் 7 தேதி)யில் நிலையிடப்பட்டிருக்கிறது.

3. இக்கழகத்திற்கு இக்கட்டிடம் இப்பொழுது தலைமையான இருப்பிடமாகும். ஆனால், இத்தலைமை யிருப்பிடத்தை இக்கழகத்தார் வேற்றாருக்கு மாறுறலாம். அப்பொழுது இவ்விடத்தை திருநெல்வேலி ஜில்லாவிற்குத் தலைமையான இருப்பிடமாக்கி சபையார் தங்கள் நேரான ஆளுகையில் வைத்துக்கொள்ளுவார்கள்.

### II-வது. தொகுதி.

## கழகநோக்கங்கள்.

4. திராவிடமதமாகிய சைவமய உண்மையை சைவசமயிகளோடு ஏனைய சமயிகளுக்கும் அறிவித்துச் சமயவுணர்வை யெழுப்பி அந்நெறியில் சற்புத்திரியாடு நிலைபெறச் செய்தல்.

## குறிப்பு.

அங்ஙனம் செய்தலில் பிறமத நிந்தனையின்றியுந் தமக்கு இணக்கமில்லாத அயல்மதக் கொள்கைகளிடத்து வெறுப்பின்றியும் ஆந்துணையு மொருங்கே அன்பு பாராட்டல் வேண்டும்.

5. தமிழறம் ஓம்பல் (சைவ தருமபரிபாலனம்) அதாவது இக்கழக நோக்கத்திக்கு மாறுபடாத அல்லது தொடர்புடைய பழைய

அறங்கள் அவற்றின் தர்மகர்த்தர்களது கவனக்குறைவால் சீர்கெட்டுவருமாயின் நடுநிலையிற் சீர்செய்து நன்னிலைக்குக் கொணர்தல்.

6. அத்தகைய புதிய அறங்களையும் கால இயல்போடு மாறுபடாது பேணி மேற்கொள்ளுதல்.

உரை. அறம் என்னுஞ் சொல்லில், கோவில், மடம், கல்விச்சாலை முதலியன அடங்கும்,

7. தமிழ்மொழி ஓம்பல்.

8. தாழ்ந்த நிலையெய்திய திராவிட இனத்தாரை நன்னிலைக்குக்கொணர்தல்.

9. திராவிடத் தொகுதியாரின் உட்பிரிவுகளையும், வழக்கங்களையும், சீர்திருத்தி, ஒருநிலைப்படுத்தி உயர்த்துதல்.

உரை:—திராவிடர் என்ற சொல் தனித்தமிழ் சாதியாராகிய தமிழர், மலையாளர், தெலுங்கர், கன்னடர், துளுவர் ஆகிய ஐவரையும் குறிக்கும்

10 அரசியல் முறைகளிற் கலவாது ஆங்கில வரசாட்சியாரிடத்தும், ஆங்கிலேய அரச குடும்பத்தினிடத்தும் பேரன்புடைய இக்கழகத்தார் அவ்வன்பு யாவரிடத்தும் என்றும் நிலைத்திடுவதற்காவன இயன்ற அளவு செய்தல்.

III-வது. தொகுதி.

## கழக உறுப்பினர்.

11. இக்கழகத்தி னுறுப்பினர் இத்தனை என்னும் எண்ணுட்படார.

12. இருபாலாருள்ளும்; எவ்விடத் துள்ளாராயினும் பதினெட்டுக்கு மேற்பட்டவயதும், கல்வியறிவும், நல்லொழுக்க நாட்டமும், உண்மையாராய்ச்சி விருப்பும், அரச அன்பும், தமிழ் மதமாகிய சைவப்பற்றும், இக்கழகத்தின் சட்டங்களைத் தழுவி நடக்குந் தகுதியும் உடைய தமிழ்மக்கள் உறுப்பினராதற் குரியர்.

குறிப்பு:—தமிழ் மக்கள் என்பது திராவிடர் ஐவரையும் குறிக்கும்.

13. உறுப்பினர் ஒவ்வொருவரும் முதற்பணம் (Entrance Fee) ரூபா நாலும் நிகழும் ஆண்டின் சந்தா ரூபா ஒன்றும் முன் பணமாகக்கொடுத்தல் வேண்டும். மற்றுத்தம்முளப் பாங்கின் படி உதவிபுரிதலுமாம்.

14. ஆண்டின் தொடக்கத்திலோ, இடைக்காலத்திலோ எப் பொழுதானாலும் 13-வது கட்டளையின்படி உறுப்பினராகலாம். ஆனால் அவர் செலுத்தும் ரூபா ஐந்தில் சந்தா ரூபா ஒன்றும் அவ் வாண்டிற்கே வரவுவைத்துக் கொள்ளப்படும்.

15. கழக உறுப்பினர் யாவரும் ஆண்டின் தொடக்கமாகிய ஏப்பிரல் மாதத்தில் அவ்வாண்டின் சந்தாவை 30-ம் தேதிக்குள் செலுத்துதல் வேண்டும் அங்ஙனம் கொடாவிடில் தாமதப்பட்ட ஒவ் வொரு மாதத்திற்கும் ஒவ்வொரு அணாக்கூட்டி வாங்கப்படும்

16. யாராவது முதன் முதலிலாவது, பின்னாவது ஒரே தடவையில் அதற்கென்று நன்கொடை ரூபா 25 செலுத்தினால் அவருயிருள்ள காலம் வரைக்கும் கழக உறுப்பினராக அமையலாம். அவர் பின்னால் சந்தாக்கொடுக்க வேண்டாம்.

17. உறுப்பினராதற்கு விருப்புள்ள தகுதியாளர் முற்குறித்த தொகைப் பொருளுடன் இப்புத்தகத்தின் கடைசியில் சேர்த்திருக்கும் 1-வது இலக்கமிட்ட வேண்டுகோட்படி வரைந்து அமைச்சருக்கு அனுப்புதல்வேண்டும்.

18. முற்குறித்துள்ள தொகைப்பொருள் அனும்பப் படாவிடின் வேண்டுகோள் கவனிக்கப் படமாட்டாது.

19 உயிருள்ள காலம்வரை உறுப்பினராகும் விருப்புடையார் அதனை வேண்டுகோளில் விளக்கவேண்டும்.

20. அவ்வேண்டுகோளை நிறைவேற்றற் கழகத்தார் முடிபுக்கு அமைச்சர் மூன்று மாதத்திற்குள் கொண்டுவரல் வேண்டும். அவ் வேண்டுகோளைக் கைக்கொள்ளவோ, காரணங்கூறாமல் தள்ளவோ, அச்சங்கத்தார் செய்யலாம். அவர்கள் தீர்மானம் முடிவானதாகும்.

21. அமைச்சர் அவ்வேண்டுகோளின் மேல் கிடைத்த முடிவை, அவ்வவர்க்குக்கூடிய விரைவில் தெரிவிப்பதுடன், அவ்வேண்டுகோள் தள்ளப்பட்டால் பணத்தையும் திருப்புதல் வேண்டும். அது கொள்ளப்பட்டால் அந்தத் தேதிமுதல் அவர்கழக உறுப்பினராவர்.

22 12-வது கட்டளைப்படி சேர்க்கப்பட்ட உறுப்பினரைத் தவிர ஏழாவது கட்டளையிற் கண்ட நோக்கமாகிய "தமிழ்மொழி ஓம்பல்" மட்டில் எம்மதத்தாராகிய திராவிடரும் தனி உறுப்பினராகலாம்.

23 இத் தனி உறுப்பினராவதற்கு 12-வது, கட்டளையிற் கண்ட சைவப் பற்றொழிந்த ஏனைய தகுதிகளனைத்தும் வேண்டும்

## IV-வது. தொகுதி.

## பொதுக்கழகம்.

24 மூன்றாவது தொகுதிப்படி சேர்க்கப்பட்ட உறுப்பினர் குழுவை பொதுக்கழக மென்றழைக்கப்படும்.

25. இப்பொதுக்கழக உறுப்பினரெவர்க்கும் இக்கழகத்தின் ஆராய்ச்சிக்கு வருகின்ற எவ்விதமான பொறுப்புகளிலும் தொடர்புரிமை உண்டு. ஆனால், 22-வது, கட்டளையிற் கண்ட உறுப்பினர்க்கு 7-வது, கட்டளையிற்கண்ட நோக்கமாகிய தமிழ்மொழி பேணும் வழியில் மட்டும் உரிமையுண்டு.

26. இம்கழகத்துக்கு, ஒருவர்க்கதிகம காப்பாளராகவும் (Patron) ஒருவர்க்கதிகம் உதவிக் காப்பாளராகவும இருக்கலாம, ஆனால், காப்பாளர் ஒரே முறையில் 1000 ரூபாய்க்கும், உதவிக காப்பாளர் 500-ரூபாய்க்குங் குறையாமல் நன்கொடையாக உதவவேண்டும். அவர்கள் உயர்ந்த குடிப்பிறப்பின் தகுதிவாய்ந்த சீமான்களாகவோ சீமாட்டிகளாகவோ இருக்கலாம. உயிருள்ளவரை இச்சீரிய நிலை அவர்க்கு உண்டு. மற்று, மேல் ஒன்றும் உதவாமலே உறுப்பினர் உரிமைகள் யாவையும் அவர்க்குளவாம்.

27. இக்கழகத்திற்கு ஒருதலைவரும், ஒரு உதவித் தலைவரும், ஒரு அமைச்சரும், ஒரு உதவி அமைச்சரும், ஒரு பொருளாளரும், ஒரு நிறைவேற்றுக் கழகமும் (Executive Committee) இருத்தல் வேண்டும். இவர்கள் அனைவரும் ஆடவர்களாகவே இருத்தல் வேண்டும்.

## பொதுக் கழகத்தின் கடமைகள்.

28. இக்கழக நோக்கங்களை நிறைவேற்றுக் கழகவாயிலாக நிறைவேற்றல்.

29. கழகத்தின் வளர்ச்சிக்கும், மதிப்புக்கும், ஆவன செய்தல்.

30. 27-வது கட்டளையிற்கண்ட பொறுப்பாளர்களையும், நிறைவேற்றுக் கழகத்தையும் மூன்றாண்டுகட்கொருமுறை ஆக்கல்.

31. அவ்வாண்டுகள் கழிந்த பின்னர் மீண்டும் அவர்களில் எவரையும் தெரிந்தெடுக்கினும் எடுக்கலாம்.

32. கணித பரிசோதகரை ஆண்டுதோறும் ஆக்கல், இது, ஆண்டு முழுமைக்கும் ஏற்படும் கணக்குகளையும், சொத்துக்களையும், பரிசோதித்துக் கண்டநிலை முழுமையும் தெரிவித்தலின் பொருட்டு.

33. நிறைவேற்றுக் கழகத்தார், பொறுப்பாளர்கள் இவர்கள் வேலையின் நிலையினை உற்றறிதல் அவர்க்கு புதிதானவும், கூடுதலானவும் பொறுப்புக்களைக் கொடுத்தல் அல்லது அவைகளை மாற்றுதல் முதலியன.

34 அவ்வப்போது சட்டங்களைக் கூட்டல், குறைத்தல், மாற்றல்.

35. கழக நோக்கங்கள் நன்றாய்ச் சித்திபெறும் பொருட்டு இச் சட்டத்தின் பல பகுதிகளையும் தழுவி உள்ளுரைச் சட்டங்களை (Bye-Law) உண்டாக்கல்.

36. நிறைவேற்றுக் கழகத்தார் கொண்டுவரும், ஒவ்வொரு ஆண்டின் அறிக்கைகளைப் பரிசோதித்து வேண்டும் ஆணையளித்தல்.

37. நிறைவேற்றுக் கழகத்தார் கொண்டுவரும் நிகழும் ஆண்டில் எதிர் பார்க்கப்படும் வரவு செலவு திட்டக் கணக்குகளை ஆராய்ந்து வேண்டும் திருத்தங்களுடன் ஆணை கொடுத்தல்.

38. பொதுக்கழகம் நிறைவேற்றுக்கழகம் ஆகிய இவற்றின் உறுப்பினருள் எவரொருவர் அரசாட்சியாரிடத்து அன்பிலாதவரெனக்காணப்படினும், இச்சட்டங்களின்படி தக்கார் என மதித்தெடுக்கப்பட்ட ஓர் உறுப்பினர் தகவிலரெனக் கூறும் வண்ணம் தீநெறிக்கு செல்லினும் அல்லது நேராகவோ மறைவாகவோ இக்கழக வேலைகளுக்குத் தடைசெய்யினும் இக்கழகத்தின் பொருள்களைக் கவரவோ கவர உதவிபுரியவோ, செய்யினும், இவர்கள் இக்கழகத்தினின்றும் நீக்கப்பெறுவர்.

39. அங்ஙனம் நீக்கப்பெற்றவர் சீர்திருத்தம் பெற்று நல்லொழுக்கில் நிலைபெறுவதாய் சான்றாகின் அவசியமானால் பின்னுமவரை 17-முதல் 20-வரையுள்ள கட்டளைகளின்படி கழக உறுப்பினராக்கலாம்.

40. இச்சட்டத்தில் இன்னும் இப்பொதுக் கழகத்திற்கு பலவிடங்களிற் குறிக்கப்பட்ட கடமைகளை நிறைவேற்றுதல்.

41. நிறைவேற்றற் கழகத்தாரால் பொதுக்கழகத்தின் ஆணையை எதிர்பார்த்து 73 வது, கட்டளையின்படி செய்யும் விசேஷச் செலவுகளை ஆராய்ந்து ஒப்புதல்

42. கழகத்தின் நன்மைக்காவன கருதி சட்டப்படி வேறு வேண்டுவன சூழ்ந்து முடிவுசெய்தல

43. பொதுவாய்ப் பொதுக் கழகம் ஆண்டில் ஒரு தடவை ஏப்பிரல் மாதத்தில் கூடவேண்டும், அதில் சென்ற ஆண்டின் அறிக்கையும் நிகழும் ஆண்டில் எதிர் பார்க்கப்படும் வரவு செலவுகளும், அவ்வாண்டில் சைவ மகா சங்கம் கூட்டுதலும, கூட்டவேண்டிய முறைகளும் கருதப்படவேண்டும். நிறைவேற்றற் கழகத்தாரால் கொண்டு வரபபட்ட விஷயங்களும் அல்லது அதன் உறுப்பினருள் மூவரால் கையெழுத்துச் செய்யப்பட்டு தெளிவான 30-நாளைக்கு முன் அமைச்சருக்கு அறிவிப்புக் கொடுக்கப்பட்ட விஷயங்களும் அப்பொதுக் கழகத்தார் சூழ்ச்சிக் குரியனவாம். 27-வது, கட்டளையிற்கண்ட பொறுப்பாளரைத் தெரிந்தெடுத்தலும், அவர்கள் கடமையாகும். அக் கூட்டம் பொதுக்கழகத்தாரால் முன்னரே தீர்மானிக்கப்பட்ட இடத்தில் கூடவேண்டும். அவ்விதம் இடம் தீர்மானிக்கப் படாவிட்டால் தலைமையான இடத்தில் கூடவேண்டும்.

44. 43 வது கட்டளைப்படி ஏப்பிரல் மாதத்தில் ஓர் தேதியைக்குறிப்பிட்டுப் பொதுக்கழகம் கூடும்படி முன்னதாக உறுப்பினரெல்லோர்க்கும் அப்பொதுக் கழகத்தார் முடிவு செய்யவேண்டிய பொருள் அட்டவணையுடன் அமைச்சர் அறிவிப்புக் கொடுத்தல் வேண்டும். அவ்வறிவிப்பு கொடுக்கும் நாளுக்கும் பொதுக்கழகம் கூடும் நாளுக்கும், இடையில் 20-நாட்களுக்குக் குறையாமலிருத்தல்வேண்டும். அறிவிப்பும் அட்டவணையும் எப்பொழுதும் அச்சிட்டிருக்கவேண்டும். அவ்வறிவிப்பைப் பார்த்தற்கு உறுப்பினர் ஒவ்வொருவருடைய கையெழுத்து இருக்கவேண்டும். அக்

லது தபாலாபீஸ் நற்சாட்சி (சர்டிபிக்கெட்) ஆவது இருக்கவேண்டும்.

45. விரைவில் நடக்கவேண்டிய பணிகள் யாதேனும் இருக்குமாயின் இப்பொதுக் கழகத்தின் சிறப்புக் கூட்டங்களைக் கூட்டலாம். அது கூட்டுதற்குத் தலைவராவது, அமைச்சராவது, நிறைவேற்றுக்கழகத்தாராவது, அல்லது பொதுக்கழக உறுப்பினர்க்குள் பன்னிருவர்க்குக் குறையாத எண்ணத்தவரேவது, கையெழுத்துச் செய்து அறிவிப்புக் கொடுக்கவேண்டும். அமைச்சர் ஒழிந்த ஏனையோர் கூட்டுவராயின் அமைச்சருக்கு எழுத்துவழி அறிவித்தல் வேண்டும். அமைச்சர் தானேகவே சிறப்புக் கூட்டத்தைக் கூட்டும்போதும், ஏனையோர் வேண்டியபடி செய்யும்போதும், 44-வது, கட்டளைப்படி அறிவிப்புக் கொடுக்கக் கடமைப்பட்டிருக்கிறார். அவர் அங்ஙனம் செய்யாதொழியின், முற்குறித்த ஏனையவர்கள் அப்பொருண்மையையும் விளக்கி 44-வது, கட்டளைப்படி அறிவிப்புக்கொடுக்கவேண்டும்.

46. பொதுக்கழகத்திற்கு நிறைவெண் (கோரம்) மொத்த உறுப்பினர்களுள் இருபதின்மர், அவ்விருபதின்மருள் பன்னிருவர் நேரில் அவ்விடத்தில் வீற்றிருத்தல் வேண்டும். மற்றையோர் அதிகாரப்பத்திரம் அனுப்பலாம். இச்சபையின் சட்டங்களை வேறுபடுத்த வேண்டுவதாயின் மேற்குறித்த எண்ணில் இரண்டு பங்கிருத்தல் வேண்டும். அதாவது, மொத்த உறுப்பினருள் நாற்பதின்மருக்குக் குறையாமல் வேண்டும். அந்த நாற்பதின்மரில் இருபத்துநாலு பேருக்குக் குறையாமல் அவ்விடத்திற்கு வந்திருத்தல் வேண்டும். ஏனையர் அதிகாரச் சீட்டாவது அனுப்பியிருக்க வேண்டும்.

47. அக்குறித்த சீட்டு எழுத்திலிருக்க வேண்டும். அது அடியிற்கண்ட 48-முதல் 55-முடிய உள்ள கட்டளைகளை உள்ளடக்கியிருத்தல் வேண்டும்.

48. தனது பதில் ஆளாகவருும் உறுப்பினர் பெயர்.

49. உறுப்பினரல்லாதார் பதில் ஆளாக வருவதற்குரியரல்லர்

50. கழகங் கூடுந்தேதியும் இடமும்.

51. குடவோலை (Vote) கொடுக்கும் பொருள் இன்னதென்

52. குடவோலையின் விதம்:—ஆம், அன்று என்பது.

53. கழகம் கூட்டும் அறிவிப்பின் தேதி, எண், கையெழுத்துச் செய்தவர் பெயர்.

54. தந்திவழி அதிகாரப் பத்திரம் கொடுத்தல் கூடாது, பதில் ஆள் நியமிக்கும் உறுப்பினர். அமைச்சரையே நியமித்து அதிகாரப் பத்திரத்தை அவருக்கு அனுப்பினால் வேலை எளிதிலே நடைபெறும். கூட்ட ஆரம்பத்தில் எல்லா அதிகாரப பத்திரங்களையும் வேண்டும்போது எடுத்துக் கொள்வதற்குத் தலைவரிடம் சேர்க்கப்படவேண்டும்.

55 பதில் ஆள் வழியாகக் குடவோலை (Vote) (ஓட்டு) கொடுக்கும் உரிமை தலைவருக்கில்லை.

56. ஒவ்வொரு பொதுக் கழகத்திலும் தலைவர் முதன்மை பூண்பர். அவரில்லாதபொழுது, உதவித் தலைவர் அந் நிலையைப் பெறுவர். இவ்விருவர்களும் இல்லாவிடின் உறுப்பினரொருவரை அக்கூட்டத்திற்குத் தலைவராகத் தெரிந்தெடுக்கப்படும்.

57. கூட்டத்தின் முடிபுகள் கூடியவருள் தெளிவான பேரெண்ணினர் (Majority) கருத்துப்படியாம். மற்றுமுள்ள நடபடிக்கைகளெல்லாம் பொதுவாய் வாதஞ்செய்து முடிவு செய்துகொள்ளும் கழகங்களுடைய (Debating Societies) வழக்கங்கள் போன்றனவேயாம்.

58. எந்தக் கூட்டத்திலாவது ஒருபொருளைத் தழுவிய எண்ணம் இருபிரிவினதாயும், அவ்விருபிரிவின் எண் சமமாயுமிருந்தால் தலைவர் தனது கிழமைக் குடவோலை (Casting Vote) யுடன் அவர் சேர்ந்த பிரிவின் பொருளை முடிவு செய்யலாம். மற்றக் காலங்களில் அக்கிழமைக் குடவோலை அவருக்கில்லை.

59. பொதுக்கழகக் கூட்டத்தில் பொதுவாய் உறுப்பினரல்லாதவர் வருதல் கூடாது. ஆனால், தலைவரின் நோக்கம்போல் தக்காரை உள்ளே வரும்படி செய்யலாம்.

60. கூட்டங்களில் நிகழ் பொருள்கள் யாவும் (Minutes) பக்கம் போட்டுக் கட்டப்பட்ட புத்தகங்களில் எழுதப்பட வேண்டும். அதில் அக்கூட்டத் தலைவரும் அமைச்சரும் சரிபார்த்து கையொப்ப மிடுதல்வேண்டும்

## V. வது தொகுதி.

## நிறைவேற்றற் கழகம்.

61. நிறைவேற்றற் கழகத்திற்காகப் பொதுக்கழகத்தில் நின்றும் எழுவரைக், கூடியவருள் பேரெண் கருத்துப்படி, மறை குடவோலை (Voting By Ballot) வழியாய் பொதுக் கழகத்தாரால் மூவாண்டுக்குத் தேர்ந்தெடுக்கப்படும். அக்கால வெல்லை கழிந்ததின் பின்னும் அவரையே தெரிந்தெடுக்கினும் எடுக்கலாம். அங்ஙனம் தெரிந்தெடுத்தற்குரிய பொறுப்பாளரை பொதுக் கழகத்தினருள் நால்வரால் கையொப்பமிட்டு பொதுக் கழகம் கூடுவதற்கு 10-நாளைக்கு முன்னர் அமைச்சருக்கு எழுத்துவழி தெரிவித்திருக்க வேண்டும். அமைச்சர் அதனைப் பொதுக்கழகத்தார் கவனத்திற்குக்கொண்டுவர வேண்டும். இவ்விதம் எடுத்த நிறைவேற்றற் கழகத்தாரிடம் வேலையை ஒப்புவிக்கும்வரை முந்தின நிறைவேற்றற் கழகத்தாரே பொறுப்பாளர்களாவர்.

62. தலைவர், உதவித் தலைவர், அமைச்சர், பொருளாளர், அவர்கள் நிறைவேற்றற் கழகத்தில் பணியின் பொருட்டு இருக்க வேண்டியவர்களாதலின் அவர்களை முதன் முதலில் தெரிந்தெடுக்கப்படும். 22. 23-வது வகுப்புகளின்படி தெரிந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களை நிறைவேற்றற் கழகத்திற்கு தெரிந்தெடுக்க உரிமையில்லை.

63. இந்நிறைவேற்றற் கழகம், அமைச்சர் அல்லது உதவி அமைச்சர் உள்பட நான்குறுப்பினர் கூடினால் கூட்டமாகக் கருதுதற்கு நிறைவெண்ணாகும்.

64. இந் நிறைவேற்றற் கழகம் மாதத்திற்கு ஒருதடவை ஒவ்வொரு ஆங்கில மாதத்தின் இரண்டாவது ஞாயிற்றுக் கிழமை தோறும் பிற்பகல் 4 மணிக்குக் கூடும். இதற்கு அறிவிப்புக் கொடுக்கப் படமாட்டாது. ஆனால், அக்கழகத்தை அடுத்த மாதம் குறித்த ஞாயிற்றுக் கிழமை யல்லாத மற்றொரு நாளில் கூடும்படியாக மாற்றி வைத்தாலாவது அல்லது அவசர நிமித்தம் இடையில் கூட்டினாலாவது அவ்விதம் கூடும் கூட்டத்தில் நடைபெற வேண்டிய பொருள் அட்டவணை யுடன் உறுப்பினரெல்லாருக்கும் 4-நாளைக்குமுன் அமைச்சரால் அறிவிப்புக் கொடுக்கப்படவேண்டும். அவ்விதம் அறிவிப்பு 44-வது கட்டளையிற் கண்டபடி கொடுக்கப்பட

வேண்டும். 45-வது, கட்டளைப் பொருள்களைத் தழுவி நிறைவேற்றற் கழகத்தின் சிறப்புக் கூட்டங்களையும் கூட்டலாம். ஆனால், அவ்விடத்தில் பன்னிரண்டு உறுப்பினர் என்பதற்கு இவ்விடத்தில் மூன்று நிறைவேற்றற் கழக உறுப்பினர் வேண்டுகோள் செய்தல் வேண்டும். ஏனையவை 45-வது கட்டளையின் கருத்தைத் தழுவியே நடைபெறல் வேண்டும்.

65. நிறைவேற்றற்கழகம் கூடும்போது, தலைவரோ, உதவித் தலைவரோ முதன்மை பூண்பர். அவர்கள் இல்லாவிடின் வந்திருக்கும் உறுப்பினருள் ஒருவரை அற்றைக் கூட்டத்திற்குத் தலைவராக தெரிந்தெடுக்கப்படும்.

66. இக்கழக நடபடிக்கைகள் எண்ணிட்டு கட்டப்பட்ட (Bound & paged) புத்தகத்தில் எழுதப்பட வேண்டும், அதில் அக்கூட்டத்தில் வந்திருந்த உறுப்பினர் பெயர்களும் குறிக்கப்படும். கூட்ட முடிபுகளெல்லாம் கூடியவருள் பேரெண்ணினர் (Majority) கருத்துப்படியாகும். கூட்டம் முடிவு பெறும் பொழுது கூட்டத்தினர் முன்புக்கு எழுதினவற்றை வாசித்து சரிபார்த்துத் தலைவரும், அமைச்சரும் கையொப்ப மிடல்வேண்டும்

67. இக்கழக உறுப்பினர் யாரேனும், கூட்டத்திற்குவர இயலாவிடின் அதனை அமைச்சருக்கு முற்பட அறிவித்தல் வேண்டும். அங்ஙனம் அறிவியாமல் தொடர்ந்த மூன்றுகூட்டத்திற்கு வாராமலிருந்தால் அவர் உறுப்பினரினின்றும் நீக்கப்பட்டவராக எண்ணப்படுவர். ஆனால், அவர் கழக வேலையின் பொருட்டு சென்றிருந்தால், அங்ஙனம் கருதப்படார். ஆனால், அதனை அக்கூட்ட நடபடிக்கை எழுதும் புத்தகத்தில் பதிவு செய்தல் வேண்டும்.

68. அமைச்சருக்கு அவசியமென்று தோன்றும உத்தரவுகள் ஏதேனும் மாதாந்தர நிறைவேற்றற் கழகம் கூடுமுன்னர் பிறப்பிக்கப்பட வேண்டியதிருந்தால், அமைச்சர் அதனை எழுதித் தம்கையொப்பமிட்டு ஒவ்வொரு நிறைவேற்றற் கழக உறுப்பினருக்கும் அனுப்பலாம். அவர்களுக்கு அது சம்மதமெனின் கீழ் கையெழுத்து செய்யவேண்டும். இல்லையாயின் தங்கள் தீர்மானத்தை யெழுதிக் கையொப்பமிட்டனுப்ப வேண்டும். இறுதியில் அதனைத் தலைவருக்கு அனுப்ப அவர் தம் உட்கோளையும் எழுதி மொத்தம் கூட்டி பேரெண்ணினர் தீர்மானத்தைக் கண்டு கையொப்பமிட்டு அனுப்

புதல் வேண்டும். அம்முடிபும் நிறைவேற்றுக் கழகத்தாரது தீர்மா னமாகும்.

69. பொதுக் கழகத்தின் இரண்டாண்டுக் கூட்டங்களுக்கு இடையில் நிறைவேற்றுக் கழக உறுப்பினரில் ஒழிவு வருமாயின் அதனை நிறைவு செய்துகொள்ள அந்நிறைவேற்றுக் கழகத்திற் கே உரிமையுண்டு அதுபோலவே கழகவேலைகளில் தனி தனிபகு திகளுக்கு தனிப்பொறுப்பாளர்களை அமைச்சரின் சம்மதியுடன் நிய மிக்கலாம். ஆனால், அது காரணமாகி அவர்கள் நிறைவேற்றுக் கழ க உறுப்பினராகார். அத்தனிப் பொறுப்பாளர்கள் தங்கள் கடமை களை அமைச்சரின் அனுமதிக்குட் பட்டேசெய்யவேண்டும். மேற் கூறிய வண்ணம் நிறைவு செய்வதில் பொதுக்கழக உறுப்பினரினி ன்று இத்தொடர் புடைய சட்டங்களைப் பொறுத்தும் நிறைவேற் றப் படவேண்டும். ஆனால், அடுத்த பொதுக்கழகத்தார் அந்நிய மனத்தை ஒப்பவோ அன்றி மாற்றவோ செய்யலாம். இவ்விதியின் படி நியமிக்கப்பட்ட நிறைவேற்றுக் கழக உறுப்பினர் அக்கழகத்தி னுக்குரிய ஆண்டுகளில் எஞ்சியுள்ள காலத்திற்கே உறுப்பினராவர்.

## நிறைவேற்றுக் கழகத்தின் கடமைகள்.

70. இயன்றவரை கழகத்தின் நோக்கங்களை நிறைவேற்றல். அதற்குவேண்டிய பொருள் ஈட்டல்.

71. கழகத்தின் எவ்வித சொத்துக்களையும் பாதுகாத்தல்,

72. கழகத்தின் இயல்பான செலவுகளுக்கு அவ்வவ்வகைக்கா க திட்டப்படுத்தப்பட்ட (Baudget allotment) தொகையினின் றும் உதவல்,

73. எதிர்பாராத அவசர செலவுக்குக்காக பொதுக்கழகத்தின் ஆணையை எதிர்பார்த்து பணம் செலவிட உத்தரவளித்தல்

74. கழகத்தின் நோக்கங்களை மேம்படுத்துவதற்காவன சூழ் ந்து பொதுக் கழகத்தார் கவனத்துக்குக் கொண்டுவருதலுடன் அதற்குவேண்டும் மாதம் 15-ரூபாய்க்கு மேற்பட்ட பணியாளர்க ளை நியமித்துக்கொள்ளுதல்.

75. இக்கட்டளையைத் தழுவியும் இச்சட்டங்களின் கருத்து க்களுக்கு வேறுபடாமலும் உட்சட்டங்களை உண்டுபண்ணல். இ

வைகள் பொதுக்கழகத்தாரால் ஆதரிக்கப் பட்டால், சட்டமாகக்கருதப்படும்.

76. கழகத்தின் சொத்துக்களைக் குறித்து, நடக்கவேண்டிய உரிமை தண்ட (சிவில், கிரிமினல்) வழக்குகளை நடத்துவதற்கு அமைச்சரல்லாத மற்றோர் உறுப்பினருக்கு வேண்டுமானால் உத்தரவு கொடுத்தல்.

77 இச்சட்டங்களில் பலவிடங்களிலும் இந்நிறைவேற்றற் கழகத்திற்கு என்று குறிக்கப்பட்ட கடமைகளையும், பின்னும், இக்கழகத்தின் நன்மைக்கானும் பலவும் இக்கட்டளைகளுக்கு மாறுபடாது நிறைவேற்றல்.

## VI. வது தொகுதி.

## தலைவர் கடமைகள்.

78. முன் கட்டளைகளிற் குறித்திட்ட கடமைகள் தவிர இக்கழகத்தின் எல்லாப் பணிகளிலும் தலைவர் பொதுவான மேற்பார்வை செய்யவேண்டியது அப்பணிகளின் விவரமான பாகுபாடுகளை மேற்கொண்டு நடத்துதல் அமைச்சர் கடமையாகும்.

## VII. வது தொகுதி.

## அமைச்சர் (Secretary) கடமைகள்.

79 கழகத்தின் முக்கிய பொறுப்பாளர் அமைச்சராவர். அவரது விடாமுயற்சியாற்றான் கழக நோக்கங்கள் முடிவு பெறல்வேண்டும். அவர்க்கு முன்னர் குறித்திட்ட கடமைகள் தவிர அடியில் வருவனவும் அவரது கடமைகளாகும்.

80 பொதுக் கழகத்திற்கும் நிறைவேற்றற் கழகத்திற்கும் அமைச்சராவர் இஃதன்றி, அவ்வப்பொழுது (7-வது, கட்டளையிற் கண்ட நோக்கம் போன்றவைகளுக்காக) அமைக்கப்படும் உட்கழகங்களுக்கும் அமைச்சராக ஆக்கப்படலாம்

81. குறித்த இருகழகத்தினரது முடிபுகளை எல்லாம் நிறைவேற்ற வேண்டியது அமைச்சரின் பொறுப்பு.

82. அவ்விரு கழகத்தினர் ஆணைக்கும், சூழ்ச்சிக்கும், முடிபுக்கும், உரியவைகளை, அவர் கவனத்துக்கொணர்தல்

83. அவ்விரு கூட்டங்களையும், 45-64-வது, கட்டளைகளின் படி கூட்டுதல்.

84. வருஷாந்தர திட்டத்தில் கண்ட்வண்ணம் ரூபா பதினைந்துக்கு மேற்படாத செலவுகளைத் தானாகவும், அதற்கு மேற்பட்ட தொகைப்பொருளை நிறைவேற்றுங் கழகத்தார் கட்டளையின்படியுஞ் செலவிடுதல்.

85. ரூபா இருபத்தைந்து நிலைவரமான முன்பணமாக (Permanent advance) அமைச்சர் வசம் இருத்தல்வேண்டும். 84-வது, கட்டளைப்படி தானாகச் செலவு செய்கிற தொகைப் பொருளை நிறைவேற்றுற கழகத்தார் ஆணைபெற்று மீண்டும் ரூபா இருபத்தைந்துக்கு நிரப்பிக்கொள்ளுதல் வேண்டும்.

86. ரூபா பதினைந்திலும் அதற்குக் குறைந்ததுமான பணியாளர்களை நியமித்தலும், அவர்களிடம் வேலைவாங்க வேண்டியதற்கான அபராதம் போடல், நீக்கி வைத்தல், விலக்குதல் முதலிய சகல அதிகாரமும் அவருக்கு உண்டு.

87 பொருளாளர் கைவசமிருக்கும் சொத்துக்களைத் தவிர ஏனைய சொத்துக்களை தானே கவனித்துப் பாதுகாத்தல், அதோடு கழகத்துக்குரிய கட்டிடங்கள் முதலிய சொத்துக்களை செவ்விதாக்கல்(Repairs) முதலியன.

88. கழகத்திற்குரிய எவ்வித கணக்குகளையும், ஆதாரவுகளையும், பாதுகாத்தல், அதோடு ஒவ்வொரு பொறுப்பாளருடையகடமைகள் இன்னின்னவை என்று அவ்வப்பொழுது, தீர்மானிக்கப் பட்டிருக்கின்றதை ஒரு சேரத்தொகுத்து பொதுக்கழகத்தின் வருஷாந்தரக் கூட்டத்திற்குக் கொண்டுவந்து அவைகளை மாற்றவோ, ஒப்பவோ செய்தல்.

89. கழகத்தைப் பொறுத்த எழுத்து விடுத்தலும், விடையிறுத்தலும்.

90. வரவு செலவு கணக்குகளை உறுதிச்சீட்டு (வவுச்சர்) பற்றுச் சீட்டு (இரசீது) களுடன் முறைப்படிவைத்தல். அவ்வம்மாதத்தில் முடிவுபெறும் கணக்குகளை அடுத்த மாதங்கூடும் நிறைவேற்றற் கழகத்தார் பார்வைக்கு வைத்தல்.

91 கழகம் புரிந்த நன்முயற்சிகளைத் தழுவி ஆண்டறிக்கை வரைதல். அதில் கொண்டுவருதற்குரியவையாவன 92-வது கட்டளை முதல் 97-வது கட்டளை முடிய.

92 அறிக்கையிற் கண்ட ஆண்டின் மொத்த வரவு செலவு கணக்குகள்.

93. நிகழும் ஆண்டில் எதிர்பார்க்கப்படும் வரவு செலவுகள்.

94. சென்ற ஆண்டின் செலவு நீக்கி நிகழும் ஆண்டின் தொடக்கத்திலுள்ள மூலதனம். வட்டி இருப்புப் பொருட்டொகை, அதனை வைத்திருக்கும் விதம்.

95. நிலையியற் பொருள், இயங்கியற் பொருள்களின் அட்டவணை.

96. புத்தகசாலையிலுள்ள புத்தகங்களின் அட்டவணை.

97 கணிதப் பரிசோதகர் அறிக்கை.

98 நிலையியற் பொருள்களையும், கட்டடங்களையும், பாட்டம், வாடகை, குத்தகை முதலிய வழியிலே தக்க ஆதாயத்தின் பேரில் கொடுத்தல்.

99. கழகச் சொத்துக்களைப் பொறுத்த உரிமை, தண்டவழக்குகளை (Civil and Criminal) தொடுத்தலும் அவற்றைக் காத்தலும்.

100. அமைச்சர் தன் பொறுப்புகளைப் பார்க்கமுடியாத அவசியம் நேர்ந்தகாலத்தில் அமைச்சரின் பொறுப்புகளை உதவி அமைச்சரே பார்க்கவேண்டும். அவர் தலைமையான இருப்பிடத்தில் இல்லாத காலத்திலோ, அல்லது அவர் வேலை ஒழிவாயிருக்கிற காலத்திலோ, அமைச்சர் தன் வேலைகளைத்தன் பொறுப்பில் பொதுக்கழக உறுப்பினர் ஒருவரிடம் எழுத்துவழி ஒப்புவிக்கலாம். இதுபோலவே அமைச்சர் தன் பொறுப்புகளில் ஒவ்வொரு பகுதிகளைத் தன் பொறுப்பில் உறுப்பினர் ஒருவரிடம் ஒப்புவிக்கலாம.

101. கழகத்திற்கு வரவேண்டிய சந்தாத் தொகைகளையும், வாடகைப் பணங்களையும், வட்டிப்பணங்களையும், அன்றன்று பிரிக்கவேண்டிய நிலுவைகளையும் பிரித்தல், அவ்விதம் வந்த எல்லாப் பணங்களையும் பொருளாளர் வழி சேவிங்ஸ் பாங்கிற்கு பிரித்த இர

ண்டு நாளைக்குள் அமைச்சர் அனுப்பவேண்டும். செலவிற்கு வேண்டிய எல்லாப்பணங்களும் பொருளாளர் வழி நேரில் சேவிங்ஸ் பாங்கிலிருந்தே எடுக்கப்பட்டிருக்க வேண்டும் சேவிங்ஸ் பாங்கிற்கு அனுப்பாமல் எந்தப் பணத்தையும் செலவு செய்யலாகாது.

102 கழக உறுப்பினர், பொறுப்பாளர்கள் பேர் பதிவு புத்தகம் ஒன்றும். கழக வேலைக்காரர் பேர் பதிவு புத்தகம் ஒன்றும் வைத்தல்.

## VIII. வது தொகுதி.

## பொருளாளர் கடமைகள்.

103. கழகத்திற்குரிய பணங்களையும் தன்னிடத்தில் அமைச்சரால் ஒப்புவிக்கப்படும் இயங்கியற் பொருள்களையும் பாதுகாத்தல்.

104. அமைச்சர் வைத்திருக்கும் கணக்கைத்தவிர பொருளாளர் அமைச்சர் அனுப்பும் குறிப்பு (Memo) ஆணைச்சீட்டுகளுடன் (by Orders) வரவு செலவுக்குக் கணக்கு வைத்தல்.

105. இயங்கியற் சொத்துகளுக்கு, இயங்கியல் பொருள்பட்டியலைப் புத்தகத்தில் வரைந்து தன் கையெழுத்துடன் ஆண்டுதோறும், மார்ச்சு மாதத்தில் அமைச்சர் வழியாக நிறைவேற்றுக் கழகத்திற்கு அனுப்புதல்

106. தன்னிடமுள்ள கணக்குகள் கணக்கின்படியுள்ள பொருள்கள் எல்லாவற்றையும் கேட்கும்போது பொதுக்கழகத்திற்கோ, நிறைவேற்றுக்கழகத்திற்கோ. அமைச்சருக்கோ, தலைவருக்கோ காண்பித்தல்.

107. தன்னிடம் வரும் பணங்களை அரசியலாருடைய சேவிங்ஸ் பாங்கில் போடவேண்டும். அதற்குரிய பற்று வரவு புத்தகம் அமைச்சரிடம் இருக்கவேண்டும். அப்புத்தகத்தை, பணங்கள் போடுவதற்காவது, எடுப்பதற்காவது வேண்டும்பொழுது அமைச்சரிடமிருந்து பெற்றுத்திரும்ப உடனே அமைச்சருக்கு அனுப்புதல் வேண்டும் குறித்த பாங்கிலிருந்து எடுக்கும் பணங்கள் அமைச்சர் ஆணைச்சீட்டுக்களால் (Pay orders) ஆதரிக்கப்படவேண்டும்.

108. 107-வது கட்டளைப்படியன்றி, வேறு நிலையியற் சொத்துக்களின் ஒத்தி, விலை. எடுகளின் பேரிலோ பொருளாளரும்

அமைச்சருப சூழ்நது கொடுக்கல், வாங்கலசெய்யலாம் ஆனல் அதற்கு நிறைவேறறுகழகததாா முன் உடன்பாடு வேண்டும அத்தகைய ஆதரவுகளும நிறைவேற்றுக் கழகத்தாரால ஆதரிக்கப்பட்டு கழகததாருக்காக அமைச்சர் பேருக்கே இருததல வேண்டும்

109 இபபொழுதிருக்கின்ற சபையின் மூலதனததுடன் அவவப்பொழுது நிறைவேறறு கழகததாரால வேறு பொருள்களும மூலதனமாகச சோககபபடலாம. அவவிதம கூடிய மூலதனம எககாலத்தும் செலவு செய்யக் கூடியதலல. அதன் வருமபடியே செலவு செய்யததகுநதது. ஆனல், அவவித மூலதனஙகளாய் ஏறபடும நிலையில, இயங்கியற் பொருள்கள் அவசியம நோநதுழி அமைசசா பொருளாளருடன் கலநது நிறைவேறறு கழகததாருடைய முன் ஆணைபெற்று வேறு பொருளாக மாறறலாம. அவறறில் நிலையியற் பொருளுககு உண்டாகிய ஆதரவுகள நிறைவேறறு கழகததாரால ஆதரிக்கப்பட்டு கழகததாருக்காக அமைசசா பேருககே இருந்தல வேண்டும

110. 109-வது கட்டளையிறகண்ட மூலதானஙகளைத தவிர சபையாருக்குப பாததியப்பட்ட எவவித நிலையில, இயஙகியல, பொருள்களை அவசியம நேர்நதுழி அமைச்சா பொருளாளருடன் கலநது நிறைவேறறு கழகததாரது முன ஆணைபெறறு விறறல முதலிய சகல பாரதீனஙகளும செய்யலாம

111 அவசரம் நேர்நதால ஒரு மாததத்திற்குட்பட்ட காலததிறகுமட்டும தன் பொறுபபை தன் பொறுபபில பிறிதொரு பொதுக்கழக உறுபபினா ஒருவாவசம எழுத்துவழி ஒபபுவிக்கலாம்.

## IX. வது தொகுத்.

## உதவி அமைச்சர் கடமைகள்.

112. கழகததின் பணிகள எவற்றினும அமைசசருககு உதவி புரிதல்.

113 அமைச்சரின் உததரவை நிறைவேறறல்

114. தலையிடத்தில் அமைச்சரிலலாதபோது அவருடைய கடமைகளை ஒப்புக்கொண்டு பார்ப்பதுந தவிர நிறைவேற்றுக் கழகத்தில் அவரிடததைத் தாம்பெறுதல்.

115. கழகத்தின் கல்விச்சாலை, பயிற்சி வகுப்பு, வாசிப்புக்கூட்டம், புத்தகசாலை, அச்சுக்கூடம், அறச்சாலை, சமயத்தொடர்புள்ள இடம், இவைகளை அமைச்சரின் உத்திரவுப்படி மேற் பார்த்தல்.

116. 115-வது கட்டளையிற் குறித்த வழிகளின் வருவாய்களை வசூலித்துப் பொருளாளர்க்கும் அனுப்புதல். அவ்விவரம் அமைச்சரிட மிருக்குங் கணக்குப் புத்தகங்களிற் பதிவு செய்தல். தன்னிடம் வரவு செலவுகளுக்கு விவரமான கணக்குத் தனியாக வைத்தல்.

X. வது. தொகுதி.

## கழகநோக்கங்களை நிறைவேற்றும் வழிகள்.

117. இக்கழகத்தின் 4 முதற் 10-கட்டளையிற் கண்ட நோக்கங்களை மேற்கொண்ட பிரசங்கங்கள் நடத்தல், அவை, அரசியல் முறைகளிற் கலவை பெறலாகாது.

118. சமயநூல்களையும், நல்லொழுக்க நூல்களையும், வகுப்புகள் ஏற்படுத்திக் கற்பித்தல்

119. ஏனைய நூல்களோடு நீதிநூற்களையும், சமய நூல்களையும் பயிற்றுவிக்கும் கல்விச்சாலைகளை யேற்படுத்தல்

120. இப்பொழுது நடைபெற்று வரும் கல்விச்சாலைகளை ஒட்டி வகுப்புகளை அமைத்து சமைய நூல்களும் நீதிநூல்களும் பயிலும்படி செய்தல்

121. பத்திரிகைகள் வெளியிடுதல்.

122. துண்டுப் பத்திரம் வெளியிடுதல்.

123. புதிய நூல்களை அச்சிட்டு வெளியிடுதல்

124. புத்தகசாலை, வாசிப்புக் கூடம் அமைத்தல்.

125. கோவில்கள், மடங்கள், அறச்சாலைகள், கல்விச்சாலைகள் முதலியவைகளின் கர்த்தர்கள அவைகளை முறைபிறழ நடத்தினால் அவற்றினை முறைப்பட நிறுத்துதல்.

126. இப்பொழுது இக்கழகத்தாரிடம் ஒப்புவிக்கபபட்டிருக்கும் அறப்பொருள்களையும், இனி ஒப்புவிக்கப்படும் அறப்பொருள்களையுஞ் சரிவர நடாத்தல்.

127. தமிழகச் (தென்னிந்தியா) சரிதம், ஆராய்தல்.

128. திராவிட நாடுகளில் கிளைக்கழகங்கள் நாட்டல்.

129. இக்கழகத்தின் நோக்கங்கள் பலவற்றையும் முடிவு செய்தற் பொருட்டு, குறிப்பிட்ட காலங்களில் சைவ மகா சங்கங்கள் கூட்டல்.

## பிரசங்கம் நடத்தும்முறை.

130. பிரசங்கங்கள் கழகத்தின் நோக்கங்களுள் ஒன்றனைச் சார்ந்ததாதல் வேண்டும்.

131. இக்கழகத்தின் தலைமையிடமாகிய கட்டிடத்திலோ, மக்கள் நெருக்குள்ள இடங்களிலோ திருக்கோயில் விழாக்களையொட்டியோ, வசதிபோலப்பண இருப்புக்குத் தக்கவாறு பிரசங்கம் நடைபெறலாம்.

132. இந்நன்னோக்கம் முற்றுப்பெறப் பயனைக்கருதாது பிரசங்கம் புரிய முன்வரும் மேன்மக்கள் வேண்டும் பண இருப்புக்குத் தக்கவாறு நிறைவேற்றுங் கழகத்தார் அவர்க்குப் பரிசளிக்கலாம்.

133. பிரசங்கம்புரிபவர், கல்வி, நல்லொழுக்கம், எல்லா வல்ல இறைவனிடத்தன்பு, அரச விசுவாசம் இவைகளை யுடையராதல் வேண்டும்.

134. இப்பணிக்கு இத்தகைய தகுதியாளரை நிறைவேற்றுங் கழகத்தார் கட்டளைப்படி அமைச்சரால் அழைக்கப்படும். அவ்விவரம் பத்திரிகைகளிலோ கழகப்பதிவுப் புத்தகங்கள் வழியாகவோ அல்லது வேறுவழியாகவோ பொது ஜனங்கட்குத் தெரிவித்தல் வேண்டும்.

135. பிரசங்கத்திற்குரிய காலமும் அமைச்சரால் குறிக்கப்படல் வேண்டும்.

136. வெளியிடங்களில் கழகப் பிரசாரகர் பிரசங்கம் செய்தால், அதன் சுருக்கம் எழுதப்பட்ட கடிதத்தில் அக் கூட்டத்தின் தலைவரோடு அங்குள்ள தக்கார் இருவருடைய கையொப்பங்களும் வாங்கி அதனை அமைச்சருக்கு அவ்வப்போது அனுப்புதல் வேண்டும்.

137. கழகப் பிரசாரகர் அரசியல் முறையைப்பற்றியோ, அரசாட்சியாளர்களுடைய செய்கைகளைப் பற்றியோ, அவரது பணியாளர் செய்கைகளைப் பற்றியோ, அயல் மதங்களைப்பற்றியோ, கெட்ட

எண்ண முண்டாகும்படி பேசுவாராகில், அல்லது கழகத்தார் அவர்க்குக்கொடுத்த மேலான பணிக்குத் தகவிலர் என்று புலப்படும்படி நடந்தால், அவரை அவ்வேலையினின்றும் நிறைவேற்றுக் கழகத்தாரால் நீக்கப்படும்

138 பொதுவாக யாவருக்கும் நன்மை பயக்கத் தக்க பிரசங்கத்தையோ, அதன் சுருக்கத்தையோ. அமைச்சர் விருப்பப்படி பலவழிகளிலும் வெளியிடலாம்.

139. இசையுடன் புராணப்பிரசங்கமும், இசையுடன் சிவகதைகளும், இசையுடன் தமிழ் மறைகள் ஓதலும், பிரசங்கங்களாகவே கருதப்படும் ஆனால் அவைகளை இன்றியமையாத காலங்களில் மட்டும் நிறைவேற்றுக் கழகத்தார் ஆணையின் பேரில் நடத்தப்படும்.

## கல்விச்சாலை.

140. சமயநூல், நீதிநூற்பயிற்சிகளுக்காக கல்விச்சாலைகள் அமைத்தல், ஏனைக் கல்லூரிகளில் சமயநூல், நீதிநூற் பயிற்சிகளுக்காக வகுப்புகள் ஏற்படுத்துதல், இவைகளை நடத்துவதற்கு வேண்டிய சட்டங்கள் ஒரே தலைப்பின்கீழ் அமைந்தால் முயற்சி முற்றுதல் எளிதாம். ஆதலின் ஒரே தலைப்பின்கீழ் இக்கட்டளைகள் அமைக்கப்பட்டிருக்கின்றன.

141. மதப்பயிற்சி என்று கூறுவது தமிழ்மத தத்துவமாகிய சைவசித்தாந்த உணர்ச்சி பயிற்றுதலாம். அவ்வுண்மைக்கு இணங்கிய நீதிநூற்பகுதிகளுமாம். குறித்த பயிற்சிக்கு உதவியாக பிறமதக் கொள்கைகளையும் நேசமுறையில் ஆராய்ச்சி செய்யலாம். ஆனால் பிறமத வெறுப்பு முதலிய தீக்குணம் கலவை பெறுதற்கு கொஞ்சமும் இடமில்லாமல் காத்தல்வேண்டும். நீதிநூற் பகுதிகளில ஆசவிசுவாசம் கற்பிக்கும் நூல்களும் அடங்க வேண்டும்.

142. மதம், நல்லொழுக்கம், தமிழ்மொழி இக்கல்விகள் பயிற்றுவிக்கப் பெறாத கல்லூரிகளில் அவைகளுக்காக வகுப்புகள் ஏற்படுத்துதலும், தாழ் நிலைமையிலிருக்கும் வகுப்பாருக்கு வேண்டப்படும் இடங்களில் இலவசமாய்க்கல்வி பயிற்றக் கல்விச்சாலை அமைத்தலும், அவருள் முதிர் பருவத்தினர்க்கு அங்ஙனமே இராப்பள்ளிககூடமோ வகுப்போ பொருணிலைக்கேற்ப ஏற்படுத்துதலும் இக்கழகத்தின் கடமையாகும்.

143. இஃதன்றி சமயநூல் கற்பித்தற்கும், சமயப்பிரசங்கம் புரிவதற்கும், தேவாரம் பண்ணுடம் ஓதுதற்கும், பிரசங்கப் பயிற்சி வகுப்பு ஒன்று ஏற்படுத்தி கற்பித்தல் இக்கழகத்தை பொறுத்த இன்றியமையாத கடமையாகும்.

144. இக்கழக ஆதரவிலுள்ள "சைவ வித்தியாசாலை"யை சமயப்பயிற்சி போடு நீதிநூல் ஆராய்ச்சியும் கூட்டி நாளடைவில் விரிவுற உயர்த்துதல்.

145. திராவிட மக்களது இல்லங்களில் பெண்பாலாருக்கு சமயநீதிநூல்களை உபாத்திச்சிகளின் வழியாப்ப் பயிற்று வித்தலும் இன்றியமையாத கடமையாகும்.

146. முன்மாதிரியாக தமிழ் ஆங்கிலக் கல்விச்சாலைகள் சில சென்னை அரசாட்சியாரது கல்விச் சங்கத்தின் சட்டங்களுக்கு இயைய அமைக்கலாம். இக்கல்லூரிகளில் சமயக்கல்வியையும் நீதிநூற் பயிற்சியையும் அவசியமானல் வழிமொழிப் பயிற்சியையும் கற்பிக்கவேண்டும்.

## பத்திரிகை.

147. மாதம் ஒருமுறையோ, மூன்றுமாதத்திற்கு ஒருமுறையோ, அல்லது வசதிப்படுங் காலங்களில் தொடர்ந்த எண்ணிட்டோ இக்கழக நோக்கங்கள் பொருந்த பத்திரிகை திராவிட ஆங்கில மொழிகளில் வெளியிடலாம்

## துண்டுப் பத்திரங்கள்.

148. தமிழ், ஆங்கிலங்களிலும் ஏனைய மொழிகளிலும் அவசியம்போல் அவ்வப்பொழுது அச்சிட்டு வெளியிடப்படும். இத்துண்டுப் பத்திரங்கள் இக்கழகத்தின் நோக்கங்கள் ஒவ்வொன்றனையும் சார்ந்திருக்கலாம். இலக்கண வழூஉ முதலியவையின்றி திருத்தமாக தக்க புலவர்களால் எழுதப்பட வேண்டும்.

149. துண்டுப்பத்திரத்தின் தொகையும் அதற்கு வேண்டும். செலவும் நிறைவேற்றற் கழகத்தார் தீர்மானிக்க வேண்டும்.

## புத்தகம் வெளியிடல்.

150. இதுவரை அச்சுக்கு வாராத பழந்தமிழ் நூல்களும், அச்சிட்டவைகளுக்கு அச்சிட்ட பிரதிகள் கிடைக்காதாயின் அவற்

றை அச்சிடும் உரிமைக்கு மாறுபடாமல் அவற்றையும், இவ்வழியில் வரும் ஏனையவழி மொழி நூல்களையும், அவற்றின் மொழிபெயர்ப்புகளையும், பழய இலக்கிய, இலக்கணப் பகுதிகள் சித்தாந்த நூல்களின் புத்துரைகளையும், ஆராய்ச்சி நெறியிலுள்ள திராவிடர் சரித்திரம், அவர்கள் நாட்டின் சரித்திரம், அவர்கள் சமயச் சரித்திரம், அவர் மொழிசரித்திரம், இவைகளையும் புதிய இனிய செந்தமிழ் உரை (Prose) நூல்களையும் அவற்றின் செலவுகளுக்கு நிறைவேற்றக் கழகத்தார் ஆணைதந்ததன்மேல் அச்சிடலாம், அல்லது அவர்கள் அவை செய்வார்க்குப் பொருளுதவி செய்யலாம்.

## புத்தகசாலையும் வாசிப்புக்கூடமும்.

151. இதனை "வாகீச புத்தகசாலை" யென்றழைக்கப்படும், கழகக் கட்டிடத்திலுள்ள இப்புத்தகசாலையில் அச்சிட்டதும், இடாததுமான புத்தகங்களைச் சேகரித்துப் போற்றுதல் வேண்டும். இப் புத்தகசாலை இவ்வியனுலகின் கண்ணுள்ள மதநூல், சரித்திரம், தத்துவ சாஸ்திரம், மொழிநூல், ஆகிய எவற்றையும் உடையதாகலாம். ஆங்கிலம், வடமொழி, தென்மொழி, முதலிய எம்மொழி நூல்களுமிருக்கலாம்

152. இக்கழக வேலை விரியும்பொழுது புத்தகசாலைத் தலைவராக ஒருவரை சம்பளத்திற்கு நியமிக்கலாம்.

153. இக்கழக உறுப்பினர் உறுப்பினரல்லாதவராகிய எவரும் புத்தகசாலை வாசிப்புக் கூடங்களுக்காக புத்தகசாலையில் வைத்துப் படிப்பதற்கு எவ்வித சந்தாவும் இறுக்கவேண்டுவதில்லை.

154. வெளியிற் கொண்டுபோக விரும்பும் கழக உறுப்பினரேனும், அமைச்சரால் பதிவுசெய்யப்பட்ட புத்தகசாலை உறுப்பினரேனும், முற்பணமாக ரூ. 5 (ஐந்து) கழகத்திற்கு செலுத்துதல் வேண்டும். அதுடன் மாதம் ஒன்றுக்கு சந்தா அணா 4 செலுத்தவேண்டும். இனி புத்தகங்கள் வெளியிற் கொண்டுபோக வேண்டுவதில்லை யென்று அவர்களால் தெரிவிக்கப்படும்பொழுது அவ்வைந்து ரூபாயும் அவர்களுக்குத் திரும்பக் கொடுக்கப்படும்.

155. கல்விச்சாலையில் பயிலும் மாணாக்கருக்கும், பெண்பாலாருக்கும், குறித்த சந்தாவை பாதியாக்கப்படும். ஆனால் முற்பணம் ரூபாய் ஐந்தையும் குறைவுசெய்யப் படமாட்டாது.

156 வெளியிற் கொண்டுபோன புத்தகம் கேடடைந்தாலும் தொலைந்து போனாலும், அதன் விலைக்கு அவரே உத்திரவாதி யாவர்.

157. தடவைக்கு ஒரு புத்தகமே எடுத்துப் போகவேண்டும். இரண்டு வாரத்திற்குள், எடுத்த புத்தகம் திருப்பப்படல் வேண்டும்.

158. புத்தகப் பட்டியில் A அடையாளமிட்ட புத்தகங்கள் வெளியே கொண்டுபோக இடம்பெறா.

159. புத்தகசாலை காலை 7-மணி முதல் 9 மணி வரையும் மாலை 3-மணி முதல் 8-மணி வரையும் ஒவ்வொரு நாளும் திறந்து வைக்கப்படும்.

160. படிப்பவர், புத்தகப் பெயரையும் தமது பெயரையும் அதற்காக வைத்திருக்கும் புத்தகத்தில் எழுதி கையொப்பமும் செய்யவேண்டும்

## அச்சுக்கூடம்.

161. அச்சுக்கூடம் ஒன்று ஏற்படும்பொழுது, அதனை அமைச்சரே மேற்பார்த்து அதன் ஒழுங்கான வரவு செலவு கணக்குகளை மாதந்தோறும் நிறைவேற்றுக் கழகத்தாருக்கு ஒப்பிக்கவேண்டும். அவ்வாறே Type writer முதலிய இயந்திரியங்களும் ஏற்படும்பொழுது அவற்றின் மேற்பார்வையை அமைச்சரே கைக்கொண்டு மாதந்தோறும் வரவு செலவு கணக்கு நிறைவேற்றுக் கழகத்தாருக்கு ஒப்புவிக்கவேண்டும்

## உண்மைச்சரித்திர ஆராய்ச்சி.

162 இவ்வாராய்ச்சி இக்கழக நோக்கங்களின் சார்பில் மதாபிமானம் ஜாதியபிமானமின்றி நிகழவேண்டும். இதற்கென்று இவ்வாராய்ச்சியோ அல்லது நாட்டமோ உடைய உறுப்பினர் மூவரை நிறைவேற்றுக் கழகத்தினர் உட்கழகத்தினராக ஏற்படுத்தலாம்.

163. இவ்வாராய்ச்சிக்கு வேண்டும் புத்தகங்களோ, பண்டங்களோ, வாங்கவும் வேலை செய்பவர் செலவுக்கும் அவ்வழி முடிந்த புத்தகங்களின் உரிமைக்காகவோ, இவ்வேலையைத் தழுவிய வேறு வேலைக்கோ பொதுக் கழகத்தார். ஒவ்வொரு ஆண்டுத் திட்டக்

கணக்கிலும இயன்ற அளவு பணச செலவுக்கு உதகரவு கொடுக்க வேண்டும்.

164. இச்சட்டங்களுக்குக் கடைசியில் சேர்த்திருக்கும் A. B. C. அட்டவணைகள் இச்சபையின் ஆட்சியிலிருக்கும் சொத்துக்களுக்கு அட்டவணைகளாகும்.

165. கழக ஆதரவிலுள்ள அறங்களை இக்கழகத்தார் இயன்ற வரைக்கும் சட்டங்களின்படி செவ்வையாய் நடத்த முயல்வார்கள்.

## குருபூஜை.

166 வட்டியைக்கொண்டு குருபூஜை முதலியவை நடத்தும்படி சபையாரிடம் பணம் ஒப்புவிக்கபபட்டால் சபைக்கணக்கில் தனியான பேரேடுவைத்து வரவு செலவு கணக்கின் சுருக்கத்தை பணம கொடுத்தவருக்கோ, அல்லது அவர் சந்ததியாருக்கோ எழுத்துமூலம் கொடுப்பதுடன் குரு பூஜையின் நாள், பொழுது முதலியன இரண்டு நாளைக்கு முன்னதாகவே அவர்களுக்கு அறிவிக்கபபடும்.

167. பணத்திற்குப் பதில் வரும்படி வரக்கூடிய வேறு எவ்வித சொத்தையோ அதனை அவைபயோர் ஒப்புவிக்கலாம்.

168. எவராவதொருவர் பணத்தையோ, சொத்தையோ குருபூஜைக்கென்று விட்டுத் தனக்கிஷ்டமானவரை தர்மகர்த்தராக நியமித்து இச்சபையார் மேற்பார்வையில் நடைபெறும்படி சாசனம் பிறப்பித்தால் சபையின் பிரதிநிதியாகிய அமைச்சரோ, அவர் உதவியாளரோ பணத்தை பெற்று குருபூஜை நடத்தி நிறைவேற்றற் கழகத்தார்க்கும் தர்மகர்த்தர்களுக்கும கணக்குக் கொடுக்க வேண்டும.

169. தர்மகர்த்தரே சபையாருடைய மேற் பார்வைக்குட்பட்டு நடத்த வேண்டுமென்று சாசனம் கண்டால் தர்மகர்த்தர்கள் சபையாருடைய மேற்பார்வையில் தாமே காரியங்களை நடத்தி உறுதிச் சீட்டு பற்றுச்சீட்டுகளுடன் கையெழுத்துடன் பைண்டு செய்யப்பட்ட புத்தகத்தில் சபையார்க்குக் கணக்குக் கொடுத்தல் வேண்டும்.

170. சாசன முறையோ, அல்லது சாசனத்திற் கண்ட அறமோ ஒவ்வாததாகக் காணப்பட்டால் நிறைவேற்றற் கழகத்தார் ஒப்புக்கொள்ளாமல் தள்ளிவிடலாம்.

171. குரு பூஜைகளை தர்மகர்த்தர்கள் நடத்தாதொழிந்தால், அல்லது முறை பிறழ்ந்து நடத்தினால் அச்சாசனத்தில் கண்டபடி நடக்கும்படியாய் அன்புரிமையில் அமைச்சர் தெரிவிக்க வேண்டும் இணங்கினால் அவ்வளவில் அது முடிபெறும். இல்லாவிடின் நிறைவேற்றற் கழகத்தார் உத்தரவின் பேரில் அமைச்சர் சட்டப்படி நியாய வழக்குத் தொடருவார்

172 அவ்வப்பொழுது பணம் கொடுத்து குருபூஜை நடத்தும் விருப்புடையார் சபையின் பொருளாளரிடம் அப்பணத்தைச் செலுத்திப் பற்றுச்சீட்டையோ அல்லது பணத்தையோ அமைச்சரிடம் மூன்றுநாளைக்கு முன் சேர்ப்பித்தால், குருபூஜையை நடத்தி சபைக்கணக்கில் ஒழுங்கான வரவு செலவு செய்யப்படும். குறித்த குருபூஜை வேறொருவரால் நடத்தப்படுதல் முதலிய காரணங்களினால் முடியாதென்று கண்டால், அமைச்சரே பணத்தைப் பெற்றுக் கொள்ளாமல் மறுத்துவிடும் உரிமையுடையார்.

173. குருபூஜை சிவார்ச்சனை முதலியவை சைவ சாஸ்திரங்களைத் தழுவி நடத்தப்படும். அவைகளுக்கு மாறாக நடத்த விரும்பினால் இச்சபையில் இடம் பெறா

## அறச்சாலைகள்.

174. இதில் கோவில், சத்திரம், மடம், அன்னசாலை, தண்ணீர் பந்தல் இவை முதலியன அடங்கும். இவ்வறச்சாலைகள் நடைபெறும் விதத்தைக் கவனித்தற்கு நிறைவேற்றற்கழகத்தார் ஓர் உட்கழகம் அமைத்தல் வேண்டும் அது சைவமகாசங்கத்தாரால் ஆதரிக்கப்படவேண்டும். இவ்வுட்கழகததார் அவ்வறச்சாலைகளின் கணிக்கை அவ்வவ்வதிகாரிகளிடம் சமாதான முறையில் கணக்குகளை பரிசோதனை செய்ய இடம்பெறல் வேண்டும். அவ்விதம் பரிசோதனைக் கிணங்கினால் உட்கழகத்தார் தாமேயோ அல்லது அப்பயிற்சியிற் சிறந்தவரையோ கொண்டு பரிசோதித்தல் வேண்டும். அப்பரிசோதனையில் முடிந்த முடிபு நன்றானால் அம்மகிழ்ச்சியை உட்கழகத்தார் நிறைவேற்றற் கழகத்தாருக்கு அறிவித்தல் வேண்டும்.

176. அப்பரிசோதனையில் கிடைத்த முடிபு தீதானால் உட்கழகத்தார் அதனை அவ்வதிகாரிகளுக்கு மட்டும் தெரிவித்து அடுத்த ஆண்டுக்குள்ளாவது சீர்திருத்திக் கொள்ளும்படி முயற்சி செய்ய வேண்டும்.

175 மூவாண்டுவரை அவ்வதிகாரிகள் குறித்த திருத்தங்களைச் செய்யாமலோ அல்லது முதலிலேயே பரிசோதிக்க இடங்கொடாமலோ இருந்தால் பரிசோதனை செய்யவும், திருத்தவும் சட்டப்படி உட்கழகத்தினர் தக்க சான்றுதேடி நியாயவழக்குத் தொடரவேண்டும்.

177. ஆண்டுதோறும் தங்கள் முயற்சியின் முடிபுகளை மார்ச்சு மாதம் 31-ம் தேதிக்குள் உட்கழகத்தார், நிறைவேற்றற் கழகத்தாருக்குத் தெரிவித்தல் வேண்டும்.

178 அம்முடிபுகளை நிறைவேற்றற் கழகத்தார் அவ்வவ்வதிகாரிகளுக்கு அறிவிப்பதுடன் பத்திரிகைகள் வழியாகவும், கழகத்தின் ஆண்டறிக்கை வழியாகவும், பொதுஜனங்கட்கு வெளியிடல் வேண்டும். அதுடன் அவர்கள் சைவமகா சங்கத்தாருக்கும் இம்முடிபுகளைத் தெரிவித்தல் வேண்டும்.

179. இவ்வகைக்காக ஆண்டுதோறும் பொதுக்கழகத்தார் புறம்பாகச் செலவுக்குப்பணம் தங்கள் திட்டக்கணக்கில் மதிப்பிடலாம்

180. குறித்த வகையில் செலவு அதிகமாகும் பொழுது அதற்காகப் பொருள் புறம்பாக உட்கழகத்தினர் ஈட்டிக்காத்தல் வேண்டும். அவ்வித வரவு செலவுகளுக்குள்ள கணக்குகளை உட்கழகத்தார் நிறைவேற்றற் கழகத்தாருக்கு ஆண்டுக்கொருமுறை கொடுக்க வேண்டும்

181. இது போன்ற அறநிலைப்பாதுகாப்புக்கழகம் வேறொன்று ஒரு அறச்சாலைத்திருத்தத்தில் புகுந்திருந்தால் அதே காரியத்தில் இன்றியமையாத அவசியமில்லாமல் இவ்வுட்கழகத்தார் புகுதல் கூடாது.

## சைவ மகாசங்கம்.

182. இது ஆண்டுக்கு ஒரு முறை திராவிட நாட்டிலுள்ள தலைமையான ஒவ்வொரு பட்டணங்களில் இக்கழக ஆதரவில் நடைபெறவேண்டும்.

183. அதற்குரிய காலம் வசந்த காலத்தில் நியாயஸ்தலங்களும், கல்விச்சாலைகளும, மூடப்பட்டிருக்கும் காலமாம்.

184. அவசியமானால் ஒரே பட்டணத்தில் மூன்று முறைக்கு அதிகப்படாமல் தொடர்ந்து நடத்தலாம்.

185. இச்சங்க நிறைவேற்றுக் கழகத்தின் பொருட்டு பொதுக் கழகத்தார் உறுப்பினரிலிருந்து ஐந்து பேருக்குக் கூடாமல் ஒரு உட்கழகம் அவ்வவ்வாண்டிற்குப் பொது கழகத்தார் அமைத்து அதின் அமைச்சர், பொருளாளர்களையும் தீர்மானித்தல் வேண்டும். அவர்கள் தவறினால் நிறைவேற்றுக் கழகத்தார் அவர்களை அமைக்க வேண்டும்.

186 அமைச்சரும், பொருளாளரும் இவ்வுட்கழகத்தில் உறுப்பினராய் இருக்கலாம்.

187. சைவ மகா சங்கத்தின் தொடக்கச்செலவுகளுக்காக ஆண்டின் தொடக்கத்தில் பொது கழகத்தார் குறிப்பிடுகிற மதிப்புத்திட்டக்கணக்கில் ஒரு தொகைப்பொருள் காணப்படவேண்டும். மீதச்செலவுக்குரிய பொருள் அதற்கென்ற நன் கொடை வழியில் உட்கழகத்தினர் வசூலிக்கவேண்டும். அதற்குரிய வரவுசெலவுகளும் இருப்புகளும் உட்கழகத்தினர் சங்கம முடிந்த மூன்று மாதத்திற்குள் நிறைவேற்றுக் கழகத்தார்க்கு அனுப்ப வேண்டும் அவர்கள் அதனை கழகக்கணக்கில் கொண்டு வர வேண்டும்.

188. அம்மகா சங்கத்திற்கு நன்னடத்தையும் பெருந்தன்மையுடைய எல்லாத்திராவிட மக்களையும் வேறு பெரியோர்களையும் உட்கழகத்தார் அழைத்தல் வேண்டும்.

189. குறித்த மகா சங்கத்திற்கு புகழ்படைத்த திராவிடரே தலைமை பூணல் வேண்டும்.

190. அத்தலைமையைத் தெரிந்தெடுக்கும் உரிமை உட்கழகத்தார்க்கு உரியது.

191. குறித்த மகா சங்கத்திற்காக வரவேற்புச்சங்கம் ஒன்று திராவிடச்சீரியரில் உட்கழகத்தார் அமைத்தல் வேண்டும.

192. 190-191-வது கட்டளைகளின்படி அமைப்பவர் இக்கழக உறுப்பினராக இருக்கவேண்டு மென்பதில்லை. ஆனால், அவர்கள் அனுதாப முடையவராயிருத்தல் வேண்டும்.

193. மகா சங்கம் ஆண்டு தோறும் மூன்று நாளைக்குக்குறையாது நடை பெறல் வேண்டும்.

194. மகா சங்கம் பிரசாரகர்களை தெரிந்தெடுத்தல் அமைச்சர் கடமை யாகும் பிரசங்கங்கள் இக்கழக நோக்கத்தைச்சார்ந்து

தாதல் வேண்டும். அவைகள் எழுதியே வாசிக்கப் படவேண்டும், அவ்வுரைகளை வாசித்து முடித்தவுடன் அமைச்சரிடம் உரையாளர் அவைகளைச் சேர்ப்பிக்க வேண்டும்.

195 அவைகளை அடுத்த சைவ மகா சங்கம் கூடுதற்கு முன் நிறைவேற்றுக் கழகத்தார் அச்சிடுதல் வேண்டும்.

## கிளைச்சபைகள்

196. இக்கழகத்தின் நோக்கங் கொண்ட கிளைச்சங்கங்கள் திராவிட நாட்டில் பல இடங்களில் உண்டாக்க முயலவேண்டும். அக்கழகங்களின் உள்ளமைப்புகள் அவ்வவருடைய எண்ணம் போன்றதாம். ஆனால் அரசியல் முறைகளில் எவ்விதக்கலவையும் அவைகள் பெறாதிருத்தல் வேண்டும். அரசியலாரிடத்தில் அன்புடையதாதலும் வேண்டும்

197. முன்பணம் ரூபாய் 25 (இருபத்தைந்து) செலுத்தி ஆண்டுதோறும் ரூபாய் 10 (பத்து) இறுக்கவும் இணங்கினால் கிளைச்சபையாக ஆதரிக்கப்படும்

198 அவ்விதம் ஆதரிக்கப்பட்ட கிளைக்கழகம் மூன்று மாதத்திற்கு ஒரு முறை வரவு செலவு கணக்கும், ஆண்டு தோறும் ஏப்ரில் மாதம் 30ம் தேதிக்குள் மொத்த வரவு செலவு அடங்கிய வருஷாந்தர ரிப்போர்ட்டு ஒன்றும் இக்கழகத்திற்குக் கொடுத்தல் வேண்டும்

199 கிளைக்கழகக் கணக்குகளையும், நடவடிக்கைகளையும், தலைக்கழக நிறைவேற்றுக் கழகத்தாரால் நியமிக்கப்படும் பொறுப்பாளர் வேண்டும்போது பரிசோதிக்க இடங்கொடுத்தல் வேண்டும்.

200. தலைச்சங்கத்தாரால் வெளியிடப்படும் பத்திரிகை முதலிய இலவச வெளியீடுகள் யாவும் விலையின்றிக் கிளைக்கழகத்தாருக்கு உதவப்படும். விலையிட்ட புத்தகங்கள் ஒவ்வொன்றும் இலவசமா யனுப்பப்படும்.

201. கிளைக்கழகங்கள் இடையில நின்று முறிந்து விடுமானால் அக்கிளைக் கழகத்தைச்சார்ந்த எவ்வித சொத்துகளும் தலைக்கழகத்துக்கே உரிமை யாகும்.

202- கழகத்தை நடத்தவேண்டிய முறைகளில தலைக்கழகத்தின் நிறைவேற்றுக் கழகத்தார் தமது அமைச்சரையோ அல்லது வேறு உறுப்பினரையோ அனுப்பி உதவி செய்வார்கள்.

203. ஓரோவொரு காலங்களில் கிளைச்சங்கங்களின் ஆதரவில் சைவ மகா சங்கங்களும் நடத்தப்படும்.

204. ஒவ்வொரு கிளைக்கழகமும் வளர்ந்து முன் வருவதற்கு வேண்டிய உதவிகளை இக்கழகம் செய்யவேண்டும்.

205 கிளைக்கழகங்கள் போதுமான சொத்துக்களை பெறுங் காலத்தில் அவைகளின் நியாயமான கடனுக்கு இக்கழகம் உத்திர வாதம் செய்யும்.

206. கிளைக்கழக உறுப்பினர்கள் தாய்க்கழகமாகிய இக்கழகத்திலும் 13 முதல் 23 வரை சட்டங்களின்படி உறுப்பினராகச் சேர்ந்து அதன் உரிமைகளைக் கொண்டாடலாம்.

## XI-வது தொகுதி.

### சபையின் வருவாய்கள்.

207 இக்கழகத்தின இப்பொழுதுள்ள நிலையிற் சொத்து, இக்கழகத்தின்பால் ஒப்புவிக்கப்பட்ட (Trust) தர்மச்சொத்து, கழகத்தின் மூலதனம, அதனோடு அவ்வப்போது சேர்க்கப்படும் பொருள், ஆகிய இவற்றின் வருவாயும உறுப்பினர் உதவும் முதற் பணம், சந்தா, நன்கொடை, சபையார் மேற்பார்வையில் நடக்கவேண்டிய தர்மங்களுக்கு தர்மகாத்தர்களிடம் இருக்கும் தருமச்சொத்தின் வருவாய், விழா, குருபூசை, முதலிய காலங்களில் கிடைக்கும் காணிக்கை, அன்பர்கள் கூட்டஞ்சேர்ந்து வீடுதோறும் சென்று பிரிக்கும்பொருள், இக்கழக அச்சுக்கூடம் வருவாய், கழகவெளியீடான புத்தகவிலைப்பொருள், இன்னும் இங்குகுறிக்கப்படாத இவைபோன்ற வேறு வழிகளிலும் கழகத்திற்குப் பொருள் வருவாய் செய்யப்படும்.

208. இக்கழகத்தின் எவ்வகை வரவு செலவுகளுக்கும் முறைப்படி உறுதிச்சீட்டுப் பற்றுச்சீட்டுகளுடன் வரவு செலவுக்குக் கணக்குகள் அவ்வப்பொறுப்பாளரால் வைக்கப்படல்வேண்டும. அக்கணக்கு முதலிய வேலைகளுக்கு சம்பளத்துடன், தக்காரை அமைச்சர் நியமிக்கலாம.

209. நிறைவேற்றுக் கழகத்தார் ஒவ்வொரு ஆண்டிற்குமுள்ள வரவு செலவு மதிப்புத்திட்டக் கணக்கை பொதுக்கழகத்தார் பார்வைக்குக் கொண்டுவருதல் வேண்டும். அவர்கள் அதனைக்கூட்டவோ, குறைக்கவோ, மாற்றவோ செய்யலாம்.

210. நிறைவேற்றுக் கழகத்தார், பொதுகழகத்தார் ஏற்படுத்திய திட்டக்கணக்குக் கதிகமாக செலவுசெய்தல் கூடாது.

211. ஆனால் எதிர்பாராத இன்றியமையாத செலவுகள் நேரிடுமானால் பொதுக்கழகத்தின் உத்திரவை எதிர்பார்த்து நிறைவேற்றுக் கழகத்தார் செலவுக்கு ஆணை கொடுக்கலாம்.

212. இக்கழக நோக்கங்களில் யாதேனும் ஒன்றிற்காகப் புறம்பாய் யாராவது நன்கொடையளித்தால் அதை அவ்வக்கணக்கில் வரவுவைத்து அதற்கே ஆமாறுசெய்தல் வேண்டும். அது பிறிதொன்றிற்குரியதாகாது.

213. 7-வது கட்டளையிற் கண்ட நோக்கமாகிய தமிழ்மொழியோம்பலுக்காக கொடுக்கப்படும் கொடைகளை அதற்கே ஆக்குவதுடன் அவ்வழியில்வரும் சந்தாக்களையும் அதற்கே செலவிடப்படும்.

214. இக்கழகத்தைச் சார்ந்த பல துறைகளில் ஒருதுறைப் பணத்தை மற்றொரு துறைக்குக் கடனாகக் கொடுக்கல், வாங்கல் நிறைவேற்றுக் கழகத்தார் தீர்மானத்தின் பேரில் செய்யலாம். அவ்விவரங்கள் கணக்கில விவரமாகக் காணப்படல் வேண்டும்.

215. நிறைவேற்றுக் கழகத்தார் தயார்செய்கின்ற ஆண்டுத்திட்டக் கணக்கில் கழகத்தின் நிலையியற்பொருளுள் விலைகுறைபாடு முதலியவற்றிற்கு ஓர் தனி முதல் சேர்க்கவேண்டும்.

216. வாடகை, பாட்டம் முதலிய எவ்வகையான காரியங்களும் ரிஜிஸ்டர் ஆதாரவு வழியாகவே ஆகல்வேண்டும். வாய்க்கால் செய்யப்பட்ட எவ்வித நிபந்தனைகளும் இக்கழகத்தைக் கட்டுப்படுத்தாது.

217. 32 வது கட்டளையிற் கண்ட கணித பரிசோதகரைத் தவிர மாதந்தோறும் அமைச்சர் தருகின்ற கணக்குகளைப் பரிசோதிப்பதற்கு, நிறைவேற்றுக் கழகத்தாரால் தங்கள் உறுப்பினருள் ஒருவரை ஆண்டிற்கு ஒருமுறையாவது, அவ்வப்பொழுதாவது நியமிக்கவேண்டும். அவரால் கணக்கு தணிக்கை செய்யப்பட்டே நிறைவேற்றுக் கழகத்தாரின் கவனத்துக்கு வரவேண்டும்.

## XII-வது தொகுதி.

## பொது விதிகள்.

218. பிரசங்கக் கூட்டத்தின் தொடக்கத்திலும், இறுதியிலும், இராஜவாழ்த்து, இராஜகுடும்ப வாழ்த்து, தேவாரம், திருவாசகம், திருவிசைப்பா, திருப்பல்லாண்டு, புராணம் ஆகிய அருட்பாக்கள் இயன்றவாறு பாடும்படி செய்விக்கவேண்டும்.

219 15 வது கட்டளைப்படி அவ்வாண்டின் கடைசியாகிய மார்ச்சுமாதம் 31ம் தேதி வரை நின்ற மாதங்களுக்கு கூடுதலுடன் சந்தாவைச் செலுததாவிடின் அவர்கள் செலுத்தவேண்டிய சந்தாவையும், கூடுதலையும், வசூலிப்பதுடன் அவர்கள் பேரையும் உறுப்பினர் வரிசையினின்றும் எடுத்து விடப்படும்.

220. வெளியூர்களிலிருக்கும் உறுப்பினர் சநதாவை நிறைவேற்றற் கழகத்தாரால் நியமிக்கப்பட்ட பிரதிநிதியாளர் வாங்கலாம்.

221. வெளியூர் உறுப்பினர் தங்கள் சந்தாத் தொகைக்கு (இந்தியாவில் மட்டும்) தபால் முத்திரைகளாக அமைச்சருக்கு அனுப்பலாம.

222. கழகத்திற்கு அனுப்பப்படும் மணி ஆர்டர் உண்டி, செகு 221-வது கட்டளைப்படி தபால் முத்திரைகள், கடிதம், விண்ணப்பம், யாவும கழகத்தின் அமைச்சர் பேருக்கே அனுப்பவேண்டும்.

223. சந்தா, முதற்பணம், நன்கொடை, வட்டி, வாடகை, அல்லது குடக்கூலி, பாட்டம், குத்தகை, முதலிய எவ்வித வரவுகளுக்கும் அதனை வசூலிக்கும் பொறுப்பாளரும், பணியாளரும் உடன் உடன் பற்றுச்சீட்டு தமது கையொப்பத்துடன் கொடுத்தே வசூலிக்கவேண்டும். இது தற்கால பற்றுச் சீட்டாகும்.

224. 223 வது கட்டளைப்படி தற்காலப் பற்றுச்சீட்டு கொடுத்து வசூலிக்கப்பட்ட எவ்வகை வரவுகளுக்கும் மூன்று மாதத்திற்குள் அமைச்சர் கையொப்பமிட்ட பற்றுச் சீட்டுக் கொடுக்கப்படும். அதுவே உறுதியான பற்றுச் சீட்டாகும் அதல்லாத பற்றுச்சீட்டுக்கள் அதன் தேதிமுதல் மூன்று மாதத்திற்குமேல் செல்லாக மாட்டா

225. இக்கழகக் கணக்கு முதலியவைகளை இக்கழக உறுப்பினர் எவராவது பரிசோதிக்க விரும்பினால் அமைச்சர் ஆணைக்

மேற் பரிசோதிக்கலாம். அவர் அதற்கு இடங்கொடாவிடின் தலைவர் கட்டளைப்படி செய்யலாம். அவர் தீர்மான முடிவானதாகும்.

226. உறுப்பினர் இக்கழகக் கணக்குமுதலிய ஆதாரவுகளுக்கு நகல்வேண்டுமென்று விரும்பினால் அவர் விருப்பம் நியாயம் என்று அமைச்சருக்குத் தோன்றினால் அவர் அவ்வுறுப்பினர் செலவில் அவைகளைக் கொடுக்கலாம் அவ்வுரி தடைப்படுமாயின் தலைவர் தீர்மானம் முடிவானதாகும்

227. இக்கழகப்பணியாளர் எவரும பொதுக்கழகத் தீர்மானத்தையும், நிறைவேற்றற் கழகத்தீர்மானத்தையும், நிறைவேற்றி அவ்வவர் கடமைகளை சரிவரச்செய்து முடிக்கவேண்டும். அங்ஙனம் அவர் செய்யாவிடின், அவ்வப்பணியாளர்களை அவ்வப்பணிகளில் நின்றும் நீக்கிவைக்க நிறைவேற்றற் கழகத்தாருக்கு உரிமையுண்டு. அப்பணிக்கு மற்றொருவரை நியமிப்பதற்கும் அவர்க்கே உரிமை உண்டு.

உரை:—பணியாளர்: சம்பளத்திற் கமைவோர்.

பொறுப்பாளர் = சம்பளமின்றி வேலை பார்ப்போர்

228. அமைச்சரையும் உதவி அமைச்சரையும் ஏனைய பணியாளர்களையும் சம்பளத்திற்கு நிறைவேற்றற் கழகத்தார் நியமிக்கலாம். அங்ஙனம் சம்பளத்திற்கு அமைப்பவர்களுக்கு நிறைவேற்றற் கழகத்தில் உறுப்பினராகும் உரிமை இல்லை. பொருளாளரை சம்பளத்திற்கு நியமிக்கப்படும்பொழுது, நிறைவேற்றற் கழகத்தார் தீர்மானப்படி பிணை வாங்கப்படும். உதவி அமைச்சர் சம்பளத்திற்கு அமைந்தாலும அமைச்சசரில்லாத காலங்களில் நிறைவேற்றற்கழகத்தில் அமைச்சருக்குப் பதிலாக இருக்கலாம்.

229. கழகப்பொறுப்பாளர்கள், பணியாளர்கள் கழகப்பணியின் பொருட்டு உள்ளூரிலும் வெளியூர்களிலும் போய்வரும் நியாயமான செலவுகளை கழகத்தில் நின்றும் கொடுக்கப்படும்.

230. ஆங்கிலக் கல்லூரிகள், தனித்தமிழ் கல்லூரிகள், சைவ வித்தியா சாலைகள், தேவாரபாடசாலைகள், பெண்பாடசாலைகள், மதப்பயிற்சி வகுப்புகள் ஆகிய இவைகளின் மாணுக்கருக்கும், தமிழ் புலவர்களுக்கும ஆண்டுக்கொருமுறை இயன்ற இடங்களிலெல்லா தமிழ்; மதப்பயிற்சி, தேவாரப்பயிற்சி, முதலியவைகளில் திற ஞாக நிறைவேற்றற் கழகத்தார் தீர்மானத்தொகைக்கு பரிசளிக்கப்படும்.

231 தமிழ்மொழி, சைவசித்தாந்தம் இவைகளை வளர்க்கும் பத்திரிகைகளை நிறைவேற்றற கழகத்தார் தீர்மானப்படி ஆதரிக்கப் படும்.

232. 147 ல் கண்ட பத்திரிகைகள், 148-ல் கண்ட துண்டுப் பத்திரங்கள், 150 ல் கண்ட புத்தகங்கள், ஆகிய இவற்றில் அடங்கிய அடக்கப்பொருளைத் தீர்மானித்தற்கு 230-வது கட்டளையிற் கண்ட பரிசளிப்புக்குரிய திறமையுடையோரைத் தெரிந்தெடுக்கவும், நிறைவேற்றற் கழகத்தாரால் ஒரு உட்கழகம் நியமிக்கப்படும்.

233 இச்சட்டத்திற்கு மாறுபடாமலும் அவற்றைத் தழுவியும் ஒவ்வொரு உட்பகுதிகளுக்கும் உட்சட்டங்கள் நிறைவேற்றற் கழகத்தாரால் உண்டாக்கப்படலாம் ஆனால் அது பொதுக்கழகத்தாரால் ஆதரிக்கப்படவேண்டும்.

234. இச்சட்டத்தை, மாற்றவோ, கூட்டவோ, குறைக்கவோ, பொதுக்கழகத்தாருக்கு உரிமையுண்டு

235 13 6-09ல் இச்சபையின் பொதுக்கழகத்தார் தீர்மானித்து அச்சிட்டு வெளியிட்டிருக்கிற 1 முதல் 26 வரை யுள்ள விதிகள் அடங்கிய சட்டத்தை 1912ளு ஏப்ரல்மீ 1உ முதல் தள்ளுபடி செய்யப்பட்டிருக்கிறது

236. இச்சட்டம் 1912ளு ஏப்ரல்மீ 1உ முதல் நடப்பாகும்.

237. தமிழ் ஆங்கிலம் ஆகிய இருமொழிகளிலும் ஒன்றற்கொன்று சரியான மொழிபெயர்ப்பாகக் கட்டளைகள் வெளியிடப்படுவதில் தமிழ் பிரதிக்கும், ஆங்கிலப்பிரதிக்கும் பொருள் மாறுபாடுகண்டால் தமிழ்ப்பிரதியே உறுதியானதாகும்.

இச்சட்டம் இன்றுகூடிய விசேஷ மகா சபையில் ஆட்சேபனை இன்றி சர்வ சம்மதமாய் அங்கீகரிக்கப்படலாயிற்று.

(*Sd.*) S. KUMARASAWMY,

23-3-12. *President.*

We certify that this is true copy.

(SD.) S. KUMARASWAMI,
*Vice-President.*

„ P. A. VENUVANALINGAM

„ C. SADACOPA PILLAI

உ

திருச்சிற்றம்பலம்.

# சைவசபை, பாளையங்கோட்டை.

இக்கழகத்திற்குச் சொந்தமான

## நிலையியற் பொருள் அட்டவணை.

---

1. "திருநாவுக்கரசு நாயனார் திருமடம்" பாளையங்கோட்டை கிராமத்தில் கோபால சுவாமி கோவில் தெற்கு ரதவீதியில், கீழ்மேலோடிய ரோட்டுக்கும் தெற்கு, முத்தாரம்மன் கோவிலுக்கும் மேற்கு, ஸ்ரீனிவாசகம் பிள்ளை அவர்கள் வீட்டுக்கும் வடக்கு, இராமசுவாமி கோவில் கீழ் மாடவீதிக்கும் கிழக்கு இந்நான்கெல்லைக் குட்பட்ட பக்கப்பந்தியோடு கூடிய தூக்குவேலைக் கட்டிடம் பின்பக்கம் மடப்பள்ளி உள்பட மதிப்பு ரூபா 3,000

2 'கடை'

பாளையங்கோட்டை கிராமத்தில் பெரியகடை பசாரில் கண்டோன்மெண்டுவார்டு தென்சிறகில் வேலாயுதம் பிள்ளை கடை பொதுச்சுவருக்கும் மேற்கு, வேலுக்கோன் பிரமி இவர்கள் மனைக்கும் வடக்கு, ஸ்ரீமதி செல்லத்தம்மாள் மாணிக்கவாசக சுவாமிகள் குருபூஜை வகைக்காக சபைக்கு வாங்கிவிட்டிருக்கிற கடைக்கும் கிழக்கு, கீழ்மேல் பஜார் தெருவுக்கும் தெற்கு, இதற்குட்பட்ட மனை கீழ்மேல் தச்சுமுழம் 2 5/8 தென்வடல் தச்சுமுழம் 5-ம் இதில் கட்டியிருக்கிற 33-நம் நாரைக்கட்டு மேடை உள்ள கடை மதிப்பு ரூபா 700.

ஆக ரூபா. 3,700.

இவ்வட்டவணையிற் கண்ட சொத்துகள் இச்சபையின் மூலதனமாகும்.

---

திருச்சிற்றம்பலம்.

## சைவசபை, பாளையங்கோட்டை.

இக்கழகத்திற்குச் சொந்தமான

## இயங்கியற்பொருள் அட்டவணை.

* 1909-ம் வருஷம் ஜனவரி மாதம் 21-ம் தேதி சபைக்காக சபையின் பிரிசிடெண்டு பேருக்கு பாளையங்கோட்டை கோபால சுவாமி கோவில் தெற்கு ரதவீதியில் இருக்கும் ஐயம்பிள்ளை அவர்கள் குமாரர் ஜவுளிக்கடை அ. நயினர் பிள்ளை அவர்கள் எழுதிக் கொடுத்திருக்கிற ரிஜிஸ்டர் அடமானக்கடன் தஸ்தாவேஜின் பேரில் மாதம் ஒன்றுக்கு ரூபா 100-க்கு வட்டி அணு 12. வீதம் வட்டிக்கு நிற்கிற அசல் ரூபா 1,300

2. சபையின் அட்டவணைப் படியுள்ள பாத்திர பண்டங்கள், அல்மைரா, மேசை முதலிய சாமான்கள், புத்தகங்கள் முதலியன.

---

* குறித்த ரூபா 1800-ம் இக்கழகத்தின் மூலதனமாகும்.

உ

திருச்சிற்றம்பலம்.

## சைவசபை, பாளையங்கோட்டை.

இக்கழகத்தாரிடம் ஒப்புவிக்கப்பட்டிருக்கிற

## அறப்பொருள் அட்டவணை.

---

1. ஸ்ரீமத் மாணிக்கவாசக சுவாமிகள் குருபூஜைக்காக 1897-ம் ௵ ஜனுவரி ௴ 27௳ செட்டில்மெண்டு தஸ்தவேசு மூலமாகவும் உயில் தஸ்தவேசு மூலமாகவும், பாளையங்கோட்டை சங்கரலிங்கம் பிள்ளையவர்கள் ஸ்திரீ ஸ்ரீமதி செல்லத்தம்மாள் அவர்களால் சபைக்கு பாத்தியப்படுத்தியிருக்கிற கடையின் விவரம்:—

பாளையங்கோட்டை கண்டோன்மெண்டுவார்டு பெரிய கடைப் பசாரில் தென்சிறகில் கிழ்மேல் ரஸ்தாவுக்கும் தெற்கு பாளையங் கோட்டை சைவ சபையைச் சேர்ந்த கடையின் பொதுச் சுவருக் கும் மேற்கு தாமோதரக் கோனார் மனைக்கும் வடக்கு தெய்வ நாய கம் பிள்ளை கடை பொதுச் சுவருக்கும் கிழக்கு இந்நான்கெல்லைக் குட்பட்ட கிழ்மேல் தச்சுமுழம் 4, தென்வடல் தச்சுமுழம் 6, உள்ள இந்த மனையும் அதில் கட்டியிருக்கிற முனிசிபால் 34-ம் நம். காரைக்கட்டு ஓட்டுக்கு மச்சுக்கடை மதிப்பு ரூபா. 700.

2. ஸ்ரீமத் அப்பர் சுவாமிகள் குருபூசைக்காக 1900-ம் ௵ பிப்ரவரி ௴ 13௳ செட்டில்மெண்டு தஸ்தவேசு மூலமாக பாளையங் கோட்டை ஐயம்பிள்ளையவர்கள் குமாரர் ஸ்ரீமான் அ. நயினார் பிள்ளை அவர்களால் சபைக்குப பாத்தியப்படுத்தியிருக்கிற கடையின் விவ ரம்:—

பாளையங்கோட்டை கண்டோன்மெண்டுவார்டு பெரிய கடைப் பசாரில் தென்சிறகில் பெரிய பசார் தெருவுக்கும் தெற்கு, அ. நயி னார் பிள்ளையவர்கள் கடை பொதுச் சுவருக்கும் மேற்கு, இருளப் பக் கோனார் மனைக்கும் வடக்கு, பூதநாத பிள்ளை கடை பொதுச் சுவருக்கும் கிழக்கு, இந்நான்கெல்லைக் குட்பட்ட கிழ் மேல் தச்சு முழம் 3½, தென்வடல் தச்சுமுழம் 6 உள்ள மனையும் அதில் கட்டி யிருக்கிற முனிசிப்பல் 12-ம் நம். காரைக்கட்டு மச்சு ஓட்டடுக்குக் கடை ஒன்றும் ஷெ கடையைச் சேர்ந்த சரக்கு வைக்கிற அடைப் புகலானவைகளும், மதிப்பு ரூபா: 1,000

---